# பல்லவன்- குழப்புவதில் வல்லவன்!

**18-C, நங்கைநல்லூர் — பெரியார் பாலம்:**

ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி கத்திக் கொண்டே வந்தார். "ஏதோ அஞ்சு பைசா, பத்து பைசா ஏத்துவாங்க. ஒரேயடியா கால் ரூபா இவுன்களுக்குச் (கண்டக்டரைக் காட்டுகிறார்) சம்பளம் கொடுப்பதற்காக நமக்கு சார்ஜை ஏத்திட்டாங்க..." என்று தொடர்ந்து சைதாப்பேட்டை வரை ஒரே அர்ச்சனை! ஆச்சர்யமான விஷயம், பஸ்ஸில் எந்தப் பயணியும் அந்த அம்மாவின் பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேசாததுதான்!

**வள்ளுவர் கோட்டம் பஸ் ஸ்டாண்டு:**

வயதான பெரியவர். A47 பஸ் வந்தது. அவசர அவசரமாக உள்ளே ஏறி'பெசண்ட் நகருக்கு டிக்கெட் கேட்டார். "இது திருவான்மியூர் போற வண்டி தாத்தா இறங்கிக்கோ" என்று நீண்ட விஸில் அடித்தார் கண்டக்டர். நொந்து போன பெரியவரிடம் பிளாட்ஃபாரத்தில் ஒருவர் சென்று (பல்லவன் ஊழியரோ!) "47A வரும். A47 என்பது முன்பு 47V ஆக இருந்தது. V. W. J. JJ ஆகியவற்றை எடுத்துவிட்டு, ABCD என்று நம்பருக்கு முன்னால் எழுதியிருக்காங்க" என்றார். இதெல்லாம் நமக்குப் புரியலீங்க. பெசண்ட் நகர் போற வண்டி வந்தா சொல்லுங்க" என்றவாறு நிழலில் அமர்ந்து கொண்டார் பெரியவர்.

**29-B, பெரம்பூர் — சைதாப்பேட்டை:**

"சாதாரண ரூட் பஸ்ஸில் 'ஏ' 'பி' என்று போட்டிருப்பதற்குக் காரணம் வழி நெடுக 'ஏ' போட்டிருக்கிற பஸ் ஸ்டாண்டில் 'ஏ' பஸ்களும், 'பி' போட்டிருக்கிற பஸ் ஸ்டாண்டில் 'பி' பஸ்களும் நிற்கும். சில ஸ்டாண்டுகளில் "ஏபி" இரண்டும் போட்டிருக்கும். அங்கே எல்லா பஸ்களும் நிற்கும். இது தவிர குறிப்பிட்ட இடங்களில் நிற்கும் பஸ்கள் வேறு இருக்கின்றன" என்று விளக்கிய கண்டக்டரிடம், "ஆமாம் ஏறப் போகிற ஸ்டாப்பிங்கிலேயே, இறங்கப் போற இடம், 'ஏ'வா அல்லது 'பி'யா என்பது எப்படித் தெரியும்? எந்த பஸ்ல ஏறுவது" என்று கேட்டேன்.

"யோவ்! மூளை குழம்பிப் போயிடும்... போய்யா.. ஒரு வாரத்திலே எல்லாம் சரியாகிப் போகும்" என்றார்.

**10 — தி. நகர் — பாரிமுனை:**

"கலைஞர் ரொம்ப சாமர்த்தியசாலி என்றார் ஒரு பயணி மற்றவரிடம்.

"எப்படி?"

"பஸ் கட்டண உயர்வு அன்றே போக்குவரத்து ஊழியர்களுக்குச் சம்பள உயர்வையும் அறிவித்து விட்டார் பாருங்கள்! ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்கத்தான் பஸ் கட்டணத்தை ஏற்றியிருக்கிறார்கள் என்று எண்ணி மக்கள் ஊழியர்களைச் சாடுகிறார்கள். கலைஞர் தப்பித்துக் கொண்டார்!"

— தில்லப்பா.





• கண்ணாடி விரியனின் விஷப் பற்கள்.

# தேளும் பாம்பும் இவருக்குத் தோழர்கள்!

பார்த்தசாரதிக்குப் பெயரே 'பாம்பு பார்த்தசாரதி'தான்! கோயம்புத்தூர்காரர். பாம்பு, தேள்களுடன் கண்ணாடிக் கூண்டுக்குள் வாழ்ந்து பரபரப்பேற்படுத்தினவர். கோவை டவுன் ஹால் பகுதியிலுள்ள கணேசா பேக்கரியில் அவரைச் சந்தித்துப் பேட்டி கேட்டோம்.

''நீங்க சென்னைக்குத் திரும்ப டிக்கெட் வாங்கியாச்சா?'' என்றார்.

''இல்லை!''

''நீங்க போய் டிக்கெட் புக் பண்ணிக்கிட்டு வந்திடுங்க. நான் போய் போட்டோ எடுக்க பாம்புங்க கொண்டாந்திடறேன். பஸ்லேயே போயிட்டு வந்திடறேன்.''

''ஐயோ! பாம்பெல்லாம் பஸ்ல கொண்டாறீங்களா? வேண்டாங்க. ரிஸ்க்.. நாங்க..''

''பயப்படாதீங்க சார்! நம்ம பேக்கரியிலேயே எப்பவும் கொஞ்சம் பாம்பு வெச்சிருப்பார்! ரெண்டு நாளைக்கு முன்னாடிதான் எடுத்துக்கிட்டுப் போனார்!'' என்றார் பேக்கரிக்காரர்.

புறப்பட்டுப் போன பார்த்தசாரதி, சுமார் இரண்டு மணி நேரத்தில் ஒரு ஒயர் கூடையுடன் வந்தார். ''ஒரு ஆட்டோ பிடித்து, கொஞ்சம் சந்தடியில்லாத இடத்துக்குப் போயிடலாம் சார்'' என்றார்.

ஆட்டோவில் அவர் பக்கத்தில் உட்கார்ந்து, காலடியில் இருந்த கூடைக்குள் எட்டிப் பார்த்தேன். சுருட்டிய துணிப் பைகள். அமுல் டப்பா, ஒன்று... 'பைகளுக்குள் இரண்டு மூன்று பாம்புகள், டப்பாவில் கருந்தேள் குஞ்சுகள்' என்று அவர் படு காஷுவலாகச் சொன்ன போது உடம்புக்குள் ஒரு நடுக்கம் வெகுவேகமாக ஊர்ந்தது!

''ஏங்க! பாம்புங்ககிட்ட உங்களுக்குப் பயமே இல்லையா?'' என்று ஈனஸ்வரத்தில்தான் கேட்க முடிந்தது.

லேசாய்ச் சிரித்தபடி, ''ஐயாயிரம் கொடிய தேள்களுடனும் நச்சுப் பாம்புகளுடனும் கண்ணாடிக் கூண்டிலே தொண்ணூறு நாட்கள் இருந்திருக்கிறேன் சார்! பாம்புகளிடம் ஒரு பழக்கம்! நாம் அவற்றைத் துன்புறுத்தினாலொழிய அவை நம்மைக் கடிக்காது.''

இதற்குள் வ. உ. சி. பூங்கா பக்கத்தில் உள்ள மைதானம் வந்து விட்டது. ஆட்டோவை விட்டு இறங்கியதும்தான் மூச்சு சரியாக வந்தது.

கூடைகளிலிருந்து பைகளை எடுத்தார் பார்த்தசாரதி. முதல் பையின் கட்டைப் பிரித்து லேசாய் உதறிய போது, நீளமான நல்ல பாம்பு! இவர் ஏதோ விஷமம் காட்டிய விநாடியே படம் எடுத்து நின்றது. பார்த்தசாரதியைப் பாம்பு தீர்க்கமாய்ப் பார்க்க, பார்த்தசாரதி லேசாய்த் தம் நாக்கை வாய்க்கு வெளியே நீட்டுவதும் உள்ளுக்கு இழுப்பதுமாய் இருக்க, பாம்பும் தன் பிளவுபட்ட நாக்கை நீட்டி நீட்டி உள்ளுக்கு இழுத்துக் கொண்டது. ஒரு டம்ளரில் தண்ணீரை வைத்துக் கொண்டு, பாம்பின் கழுத்தைப் பிடித்து அதன் அருகே கொண்டு போக, பாம்பு தண்ணீர் குடித்தது!(?)

ஒரு கம்பியின் உதவியுடன், கண்ணாடி விரியனின் திறந்த வாய்க்குள்ளே விஷப் பல்லைக் காட்டினார். மெல்லிய, சன்னமான வளைந்த பற்கள். 'அப்படியே ஒரு போடு போட்டால்...' நினைத்துப் பார்த்த கணமே, கால்கள் பலவீனமுற்றுத் தாமாக இரண்டடி பின்வாங்கின.

பாம்புகளை மீண்டும் பைக்குள்ளே போட்டுக் கட்டி அமுல் டப்பாவைத் திறந்து கவிழ்த்து அடிவாரத்தைத் தட்டினார். குறுகுறுவெனத் தேள்கள் விழுந்து நகர்ந்தன. ஒவ்வொரு தேளாக எடுத்து முகத்தி

லும், தலையிலும் விட்டுக் கொண்டார். அவை தலைக்கும், தரைக்கும் வித்தியாசம் தெரியாமல் ஊர்ந்தன!

''ஏங்க! 'நாமா தொந்தரவு செய்யாத வரை, பாம்பு, தேள் எல்லாம் நம்மைக் கடிக்காது'ன்னு சொன்னீங்க! இது மாதிரியெல்லாம் உங்க இஷ்டத்துக்கு வாயைத் திறந்து பல்லைக் காட்டறீங்க, தண்ணீர் குடிக்க வைக்கறீங்க, வெறுப்பேத்தி படம் எடுக்க வைக்கறீங்க; அவற்றைப் பொறுத்த வரை இதெல்லாம் தொந்தரவுதானே! எரிச்சலடைந்து பாம்புகள் கடிக்காதா? தேள் கொட்டாதா?''

''அதற்கென்று தனி டாக்டிக்ஸ் இருக்குங்க. விஷப்பாம்பு என்றால், கழுத்துப் பகுதியில் பிடித்துக் கொள்வேன். கடிக்க முடியாது. அதே போல, தேளை....'' என்று சொல்லி, ஒரு தேளின் தலைப் பகுதியில் லேசாய்க் கம்பியால் ஒரு தட்டு தட்டினார். மறுவிநாடி அது கொடுக்கை வளைத்துக் கொண்டு, கொட்டத் தயாராயிற்று. கொடுக்கைப் பிடித்துத் தூக்கினால் கொட்ட முடியாது'' என்று தூக்கிக் காண்பித்தார்!

''உங்களை ஒரு தடவை கூடவா பாம்பு கடித்ததில்லை....?'' என்ற கேள்விக்குப் புறங்கையைத் திருப்பிக் காட்டினார் பார்த்தசாரதி. ஏகப்பட்ட வடுக்கள்! கடித்த இடத்துக்கு மேலே வெட்டி விஷம் கலந்த ரத்தத்தை வெளியேற்றி பிறகு தையல் போட்டதற்கு அடையாளம்!

''என்னைப் பாம்பு கடிச்சதற்குக் கணக்கே இல்லை. கடித்த சில விநாடிகளிலேயே கடியின் வீரியத்தை உணர முடியும். சாதாரணமாய் இருந்தால், முதலுதவியுடன் விட்டு விடுவேன். சீரியஸானால் டாக்டரிடம் போவதுண்டு. இப்போதெல்லாம்



* பார்த்தசாரதியின் அம்மா கமலா: ''அவன் பாம்புகளோட இருக்கிறதை நினைச்சா என் வயிறு பதறும்...''

சாதாரண தேள் கொட்டுக்குச் சூடாய் ஒரு டீ அடித்து விட்டுக் கண்டுகொள்ளாமல் விட்டு விடுகிறேன்.''

''பாம்புடன் இப்படிப்பட்ட அபாயமான தொரு விளையாட்டை ஆரம்பிக்கும் எண்ணம் எப்படி உங்களுக்கு உருவானது?''

''1972ம் வருஷம்தான் நாமும் வித்தியாசமான விஷயங்கள் ஏதாவது செய்ய வேண்டும் என்கிற எண்ணம் எனக்கு ஏற்பட்டது. சென்னை கபாலீஸ்வரர் கோவில் குளத்தைச் சுற்றிப் பதினைந்து நாட்கள் தொடர்ந்து நடக்கத் திட்டமிட்டேன். ஆனால் ஆறாவது நாள், கால்கள் வீங்கி, நடக்கவே முடியாதபடி ஆகி விட்டது. இந்த தோல்விதான் எனக்குப் பல வெற்றிகளின் முதல்படி. மறுபடி மறுபடி முயற்சி செய்து, நிறுத்தாமல் பின்னோக்கியும் முன்னோக்கியும் நடப்பது, முட்டிக்கால் போட்டுக் கொண்டே நடப்பது, முட்டிக் காலால் பின்னோக்கி நடப்பது பக்கவாட்டிலேயே நடப்பது (80 கி.மீ!) குறுக்காகக் காலைக்

* நல்ல பாம்புடன் விளையாட்டு.



கட்டிக் கொண்டு நடப்பது (105 கி.மீ.) நத்தை வேகத்தில் நடப்பது (பதின்மூன்று மணி நேரத்தில் நூறு மீட்டர் தூரம்) என்று பலவகை சாதனைகள் செய்தேன்.

''கேரளாவில் வேலாயுதம் என்பவர் பாம்புகளுடன் வசிக்கிறார் என்று அறிந்த போது, 'நாமும் அப்படிச் செய்தால் என்ன?' என்று தோன்றியது. பாம்புகளைப் பிடித்துக் கொண்டு வந்து கண்ணாடிக் கூண்டிலே அடைத்து அவற்றுடன் நானும் தங்கினேன். இந்தியாவின் பல்வேறு இடங்களிலும், நேபாளத்திலுமாய்ப் பாம்புகளுடன் 650 நாட்களை நான் கழித்திருக்கிறேன்!''

''எப்போதுமே பாம்புகளை உங்களுடன் வைத்திருப்பீர்களா?''

''எனக்கு வீடு போத்தனூரில் (கோவை). ஆனால் பாம்புகளையெல்லாம் அங்கே வைத்திருப்பதில் சில சிக்கல்கள். எனவே, சந்தடியில்லாத ஒதுக்குப்புறமான பகுதியொன்றில், தனியே அறை ஒன்றில் பாம்புகளுடன் நானும் வசிக்கின்றேன்.''

அண்மையில் பார்த்தசாரதி செய்த காரியங்களின் பட்டியல்: 250 கிராம் விளக்கெண்ணெயினை மடமடவென்று குடித்தது. ஐம்பது கிராம் மிளகாய்ப் பொடியினைத் தின்றது. மூன்று எலுமிச்சம் பழங்களைப் பன்னிரண்டு துண்டுகளாக்கி, கொட்டை மற்றும் தோலுடன் பன்னிரண்டு விநாடிகளில் சாப்பிட்டது!

மிளகாய்ப் பொடியும், விளக்கெண்ணெயும் இவரிடம் எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை என்கிறார்!

''ஒரு பட்டாணியை மூக்காலேயே ஐந்து கிலோ மீட்டர் தூரம் தள்ளிக் கொண்டு போயிருக்கிறேன் சார்! முப்பத்து மூணு மணி நேரம் கண்களை இமைக்காமல் இருந்திருக்கிறேன். முப்பது மணி நேரம் ஒற்றைக் காலில் நின்றிருக்கிறேன். முப்பது நிமிடத்தில் எண்பது வாழைப் பழங்கள் சாப்பிட்டிருக்கிறேன். முந்நூறு கிராம் பாகற்காயைப் பன்னிரண்டே நிமிடங்களில்....''

''ஸ்.... ஸ்.... போதுங்க பார்த்தசாரதி. மிளகாய்ப் பொடி, பாகற்காய், வாழைப் பழம் எல்லாவற்றையும் விளக்கெண்ணெயில் குழைத்து, கண்ணிமைக்காமல் ஒற்றைக் காலில் நின்று சாப்பிட்டு விட்டுத் தரையிலே மூக்கைத் தேய்க்கிறாற் போல இருக்கிறது எனக்கு!''

''இருங்க... இதையும் கேளுங்க: நூற்றுப் பதினான்கு சிகரெட்டுகளை ஒரே சமயத்தில் பிடித்திருக்கிறேன்.''

''எனக்கு மூச்சுத் திணறுதுங்க...''

சிரிக்கிறார் பார்த்தசாரதி.

''இதெல்லாம் உங்களுக்குப் பைத்தியக்காரத்தனமாத் தோணலியா?''

''என்னைப் பலரும், பலவிதமா கேலி பண்ணினாங்க; பண்ணிக்கிட்டிருக்காங்க; ஆனால் நான் மத்தவங்களைப் பத்தி சட்டையே பண்ணறதில்லை. மற்றவர்கள் எல்லாம், ஏதாவது ஒரு உலக சாதனை புரியணும்னு நினைப்பாங்க; ஆனால் நான் உலக சாதனை புரிவதிலேயே உலக சாதனை புரியணும்னு நினைக்கிறேன்!''

''இதனால் பொருளாதார ரீதியில் உங்களுக்கு ஏதாவது பயனுண்டா?''

''ம்... ஆரம்பக் காலங்களில், கண்காட்சிகளில் என்னை வைத்து, உள்ளூர் ஆசாமிகள் நன்கு பணம் சம்பாதித்தார்கள். நான் பாட்டுக்குப் பாம்புகளுடன் உள்ளே இருப்பேன். வெளியில் பண வசூலில் காண்டிராக்டர் தில்லு முல்லு பண்ணிக் கொண்டிருப்பார். அது எனக்குத் தெரியாது. ஆனால் வட இந்திய நகரங்களில் நடத்திய ஷோக்களில், நல்ல வருமானம் கிடைத்தது.''

பார்த்தசாரதி, பாம்புக் கூடையிலிருந்து, ஒரு கின்னஸ் புத்தகத்தை எடுத்துக் காட்டினார். சில பகுதிகளை அடித்து வைத்திருந்தார். அந்தச் சாதனைகளை இவர் முறியடித்து விட்டாராம்! சில 'டிக்' அடிக்கப்பட்டிருந்தன. அவை எல்லாம் இனி செய்ய இருப்பவையாம்!

''அடுத்த திட்டம் என்ன?''

''முழு மரத்தைச் சாப்பிட்டு, அதில் இருக்கும் தற்போதைய உலக சாதனையை முறியடிப்பது.''

நானும், போட்டோகிராபரும் மயங்கி விழாத குறைதான்!

— எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப்படம், படங்கள்: ஸ்ரீஹரி

# புண்பட்ட போடிநாயக்கனூர் !

தமிழன்பன்

● பூக்களில்
ரத்தம் தெறித்தது!
பொழுதுகள் ரணம்
பட்டன!

போதும் நிறுத்து!

வெடித்த துப்பாக்கி
களின் முன்

விழுந்தவன்
அலறிய அலறலில்
திடுக்கிட்டது
காற்று!
நடுங்கியது காடு!

நெருப்பு வைத்து
இருப்புகள் எரித்தாய்!
நிர்க்கதியானவன்
நெடுமூச்சுப் பட்டுச்
சூரிய விளக்கும்
ஒருகணம் அணைந்தது!

ஆறாத
உயிர்க்கங்கில்
மலிந்தது ஆன்மாவின்
சாம்பல்!

● பூகோள உருண்டையில்
புழு நெளியும்
புண்ணாய்த் தெரிந்தது
போடிநாயக்கனூர்!
போதும் நிறுத்து!

இனவெறி
இன்னத் தந்தாய்
மனித ஈரல்கள்...
மூடத்தன
மூதேவி கோயிலுக்கு
நடத்தி முடித்தாய்
நரபலி!

அடிமரம் இழந்த
கிளைகள் எத்தனை?
கிளைகளைப்
பறிகொடுத்த மரங்கள்
எத்தனை?

வேரோடு
விழுந்த விருட்சங்கள்
எத்தனை?

நிலத்தில்
உதிர்ந்த நெற்றிப்
பொட்டுகள்

ஒவ்வொன்றாய்
எண்ணிப் பார்!

விழிகளின்
வெப்பத் துளிகளை
எண்ணிப் பார்!

கட்டிய
கந்தல் தொட்டிலின்
கிழிசலை விலக்கி
உன்னைப் பார்க்கும்
வெறுமைகள்
எத்தனை
எண்ணிப் பார்!

கணக்குப் பார்க்கத்
தெரியா விட்டால்
மார்பில் அடித்துக்
கொள்ளும்

கைகளைக் கேள்!
பாடைக்குப் பயன்பட்ட
மூங்கில்களைக் கேள்!

நீரின்
ஊற்றுக் கண்களும்
உன்னைப் பார்க்கச்
சகிக்காமல்

இமைமூடிக் கொண்டன!
இனி,
கறைபடிந்த கத்தியை,
கறைபடிந்த
மானுடத்தை —
எந்த நதியில்
கழுவ உத்தேசம்?'



# "டமார்!"— வெடிச்சத்தம் அல்ல!

## வட்டமேஜை

* இன்னா சார் போடிக் கலவரம் இன்னும் உங்களுக்குத் தெளியலில்லையா. பின்னே என்ன விடியோ பக்கங்களில் வெளியான துணுக்குகள் 190 தானே? அதற்கு 190 எண்கள்தானே தந்திருக்க வேண்டும்? நீங்கள் என்னடான்னா 191 எண்கள் தந்து குழுக்கப் பட்டது என்று எழுதியிருக்கிறீர்கள்!

தக்கோலம், அ. முஸ்தபா.

* 'டமார்!' தீபாவளி வெடிச் சப்தமல்ல; என் கலர் டி.வி. பரிசுக்கனவு நொறுங்கி விழும் சப்தம்தான்!

வடுகவிருட்சியூர், ஆர். அமுதா.

* கட்டளை என்று ஒன்று அரசிடமிருந்து வந்து விட்டால் அரசு ஊழியர்கள் என்ன பாடுபடுகிறார்கள் என்பதை நகைச்சுவையாக உணர்த்தியது 'சில சராசரிகள் அலைமோதுகின்றன' சிறுகதை.

ஊத்தங்கரை, பி. கோவிந்தசாமி.

* 'ஹிட்லருக்குப் பின் வந்த ஹிட்லர்கள்' கட்டுரை கலையானதாக இருந்தது. ஒவ்வொரு சர்வாதிகாரியின் மரணமும் துப்பாக்கியிலேயே முடிந்திருக்கிறது. அல்லது நாட்டை விட்டு ஓடிப் போயிருக்கிறார்கள்.

மேட்டுப்பாளையம், மு. தேன்மொழி கல்யாணசுந்தரம்.

* ரமாமணி சுந்தர் எழுதிய "உறவின் ஆழம்" சிறுகதை படிகுப்பர்.... அப்பப்பா! இந்தப் பணம் தான் மனிதர்களை என்னமாய்ப் படுத்துகிறது.

காட்டாங்குளத்தூர், எஸ். குருமூர்த்தி.

* "சாணக்யன்" விமர்சனம் கண்டேன்! விமர்சனம் மொழிக்கு அப்பாற்பட்டது, ரசனையே முதன்மையானது என்பதைத் தெளிவாக்கும் வகையில் மலையாளப் படத்திற்கு விமர்சனம் எழுதியுள்ளீர்கள்! இது போன்ற தரமான பிற மொழிப் படங்களை அடிக்கடி எங்கள் பார்வைக்கு வையுங்களேன்!

குடியாத்தம், உமாசங்கர்.

* மாசு மருவற்ற தாயன்பின் அளவிட்டைத் தகுந்த எடுத்துக்காட்டுடன் தம் 'பார்வை'யில் நிறுவியுள்ளார் ஆர்.கே. பத்மா.

ஆரூர், ந. இராஜேஸ்வரி.

* "அயோடைஸ்டு உப்பு உபயோகப்படுத்துவது குறித்து இருந்த சந்தேகங்களைப் போக்கிவிட்டது உமது ஒரு பக்கக் கட்டுரை.

கோழிக்கோடு, சாஸ்திரி வெங்கடேஷ்.

* தலையங்கம் அசுரம் கோடி பெறும்! ஆளுங்கட்சியின் கையாலாகாத்தனத்தையும், எதிர்க்கட்சித் தலைவியின் பேதைமையையும், காங்கிரஸின் கோமாளித்தனத்தையும், ஜான் பாண்டியனின் கோழைத் தனத்தையும் இயல்பாகச் சுட்டிக் காட்டினீர்கள். சாதி இரண்டொழிய வேறில்லை என்ற நல்ல கருத்துத்தான் இன்று சாதி இரண்டு பட்டொழிய வேறில்லை என்று திரிந்து போய் விட்டதோ?

சென்னை — 92, கே. ராஜகோபாலன்.

* 'சாதி எனும் சதி! அது யார் செய்த சதி!' என்னும் தங்கள் தலையங்கமும், இதற்கு முந்தைய இதழில் இடம் பெற்ற 'இங்கு எல்லோரும் சமம்!' என்ற சிறுகதையும் இடஒதுக்கீட்டுக் கொள்கையையும், இடஒதுக்கீட்டால் சலுகை பெறுபவர்களையும் மறைமுகத் தாக்குதலுக்கு உட்படுத்த எழுதப்பட்டது என்றே கருதுகிறேன்.

காவேரிப்பட்டணம், மு.கா. நெடுமாறன்.

* 1.10.89 இதழில் "வட்ட மேஜை" பகுதியில் வெளியான இரா. மேகநாதன், அவர்களின் கடிதம் படித்தேன். வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சியது போல் இருந்தது அக்கடிதம். இட ஒதுக்கீடு என்பது சீர்திருத்தப் பணி. அதனை ஏன் கொச்சைப் படுத்துகிறீர்கள்? என்று கேட்டிருந்தார் நண்பர். அது சீர்திருத்தப் பணி அல்ல. ஓட்டு வாங்கும் பணியாகி விட்டது!

திருச்சி — 2, வி. ரமேஷ்.

* நான் தமிழகக் காவல்துறையில் பணிபுரிந்து ஓய்வு பெற்ற அலுவலர். கல்கி 1.10.89 இதழின் எட்டாம் பக்கத்தில் வெளியாகியுள்ள துணுக்கு, பிக்பாக்கெட் கேடிக்குக் காவல்துறை உதவுவதாக உணர்த்துகிறது. இதுகண்டு மிகவும் வேதனைப்பட்டேன். ஒருசில காவலர்கள் செய்திடும் தவறுக்காகக் காவல்துறையினர் யாவரும் மனம் புண்படும்படியாகச் செய்திகள் வெளியிடலாமா? தமிழகக் காவல் துறையின் வீர, தீரச் செயல்களைப் பாராட்டிட மனம் வராதது ஏனோ?

பார்த்திபனூர், பா. உமையணன் சேர்வை.

* "என்ன செய்ய முடியும்...?' எனும் கதையைப் பலமுறை படித்து மனம் கசிந்தேன்.

'குற்றவாளிகள் உருவாவதில்லை; உருவாக்கப்படுகிறார்கள்... அதுவும் யாரால்...? கடமை கண்ணியம் கட்டுப்பாட்டை நிலைநிறுத்த வேண்டிய காவல் துறையினராலும், அரசாங்க, அதிகார வர்க்கத்தினராலும்! இந்தக் கதையில் உலா வரும் மணி கேரக்டர் வெறும் கற்பனைக் கதைக்காகப் புனையப் பட்ட பாத்திரமல்ல. தத்ரூபமாக யதார்த்தத்திற்குச் சற்றும் முரண்படாது உருவாக்கப்பட்ட நிஜ பாத்திரம்! அறிமுக எழுத்தாளர் 'கோ'வை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கோயம்புத்தூர், கா.க. வேலாயுதன்.

அவனுக்குத் தேவை
ஜோரான ருசி...

அம்மாவுக்கோ
போஷாக்கில்தான் குறி...

## இருவரும் விரும்புவது

புதிய
# கேம்ப்கோ
# வின்னர்

இது ஜோரான
ருசியுள்ள சாக்லேட்
பானம். மற்ற பானங்களைவிட
மும்மடங்கு அதிகமாக வின்னரில்
உள்ள சாக்லேட் சுவை
குழந்தைகளுக்குக்
குதூகல மூட்டுகிறது.

ருசி மட்டுமா? சக்தி தரும் குளுகோஸ்
சத்தும் நிறைந்தது வின்னர்.
எனவேதான் பிள்ளைகளோடு
அன்னையரும் வின்னரையே
விரும்பித் தேர்ந்தெடுக்கின்றனர்.

குழந்தைகளின் முழுமையான
வளர்ச்சிக்கு அத்தியாவசியமான
வைட்டமின்களும் மினரல்களும் நிறைந்த
வின்னர் சூடான மற்றும் குளிர்ச்சியான
பாலில் மிக எளிதாகக்கரைகிறது.

கேம்ப்கோ
வின்னரையே தேர்ந்தெடுங்கள்.
அது ருசியில் 'வின்னர்',
போஷாக்கிலும் 'வின்னர்'.



இலவசம்
ஒரு
நெட்லான்
ஷாப்பிங்
பேக்







கேம்ப்கோ
லிமிடெட், மங்களூர்

R K SWAMY/CU/7347

# தேவேந்திரா சாரீஸ்

**மிகமிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

H.O.27, ஏலா சந்தப்பன் தெரு, சென்னை - 3. போன் : 33113
கிளை ஷோ-ரூம், கடை எண்:7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை - 17. போன் : 443367

## தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்

★ திருமதி. விமலா ராகவன், 9A/65. முதல் மாடி, W.E.A. W.E.A. சன்னா மார்க்கெட், கரோல்பாக், புதுடில்லி-110 005. ★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38 W.E.A. அஜ்மல் கான் ரோடு, கரோல்பாக், புதுடெல்லி-5. போன் : 581059, 561786. ★ மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41 சரஸ்வதி மார்க், W.E.A. காரோல்பாக், புதுடில்லி-110 005. ★ காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ், (சவுத் என்டு) 9A/40 W.E.A. கரோல்பாக், புதுடில்லி, போன்: 5723981. ★ பங்கஜம் சுந்தரராஜன், C 6/A D.D.A. Flats முனிர்கா, புது டெல்லி-67. ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்-19. ★ ஆர். ராஜாமணி அம்மாள், 46, முத்துமாரி அம்மன் கோயில் தெரு, பாண்டிச்சேரி-605 001. ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7 பிவந்திவாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய்-400 019. ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ. 20 காமதேனு கோ.ஆப்.பெஸ்டம் சாகர், செம்பூர் பம்பாய்-89 (கிளாஸ் பாக்டரி அருகில்) ★ ஜெயஸ்ரீ, 2-ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா-26. ★ திருமதி டி. எஸ். சகுந்தலா சீனிவாசன், 18/1-ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பலப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர், போன்: 224357, 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து). பெங்களூர்-560 003. ★ திருமதி துர்க்காம்பாள், 22 சேஷபுரம், தென்னூர், திருச்சி-620 017. ★ திரு. S. சேதுராமன், 50/B பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம், போன்: 20972. ★ ஆர்.வி. சுந்தர்ராவ், 13, மஹால் 4-வது தெரு, மதுரை-625 001. போன்: 26295. ★ திருமதி எஸ். லட்சுமி, 24 சீனிவாசா தெரு, சேலம்-1. (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ★ ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, சென்குப்தா தெரு, கோயமுத்தூர்-9. ★ ஸ்ரீ முருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர். எஸ்.புரம், கோவை-2. ★ மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி-1. போன் : 4191. ★ மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். ★ ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711 நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர். ★ பாகீரதி மூர்த்தி , 100 ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. ★ எஸ்.சுந்தரம், 9, சாஸ்தான் கோயில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்-2. ★ திருமதி. கே. சீதாலட்சுமி, 41, 4-வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை-28. போன்: 73244. ★ திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை-61. (பிள்ளையார் கோவில் அருகில்) போன் 433737. ★ சரோஜா கிருஷ்ணமூர்த்தி, A.P. 1186, 4-வது தெரு, தென்றல் காலனி (P.T.C டிப்போ எதிரில்) அண்ணா நகர், சென்னை-600 040. ★ பாலாஜி கிளாத் சென்டர், 22-ஏ, சக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை-45. ★ திருமதி சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை-44. ★ எஸ். பொன்னப்பன் 8.3.282, 2-வது பஜார் செகந்திராபாத் (ஆ.பி.) போன் : 59562.

குறிப்பு : மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.



* விசல் நெயர் ரும்.



* மைக்கேல் கூக்.



* ஹைரம் பதக்.



* ஹியூகோ கன்னிங்ஹாம்.



* ராகேல் டன்.

# இவர்கள் பார்வையில் இந்தியா

**செப்டம்பர் 27 — ஆம் தேதி, உலகச் சுற்றுலா தினம். சென்னையில் சில அயல்நாட்டு டூரிஸ்ட்டுகளைச் சந்தித்த போது......**

**விசல் நெயர் ரும் (மே. ஜெர்மனி):** நேற்று மகாபலிபுரம் போயிருந்தேன். என்ன அற்புதமான சிற்பங்கள்! ஆனால் என்னை நிம்மதியாய்ச் சிற்பங்களை ரசிக்க விட்டால் தானே! சுற்றி நின்று கொண்டு, அதை வாங்கிக் கொள்... இதை வாங்கிக் கொள்... நான் கைடாக வரட்டுமா? என்று தொல்லை கொடுத்தார்கள். இது எனக்கு ரொம்ப எரிச்சலாயிருந்தது.

**மைக்கேல் கூக் (இங்கிலாந்து மாணவர்):** என் இரண்டரை வார இந்தியப் பயணத்தின் போது, ஜோக் நீர்வீழ்ச்சியை நான் ரசித்து மகிழ்ந்த அனுபவத்தை மறக்கவே முடியாது. அதற்காகவே இன்னும் ஒரு தடவை இந்தியாவுக்கு நிச்சயமாய் வருவேன்!''

**ராகெல் டன் (நியூஜிலாந்த்):** நகரங்களில் ஃபாஷனாக உடை அணிந்த பெண்களை விட ராஜஸ்தானில் கிராமப்புற பெண்களின் உடையும் பலவிதமான பளபளக்கும் அணிகலன்களும் என்னை பிரமிக்க வைத்து விட்டன. பனியன், பாண்ட் அணிந்த நான், அவர்களுடன் பேச ஆசைப்பட்டு நெருங்கினேன். என்னை ஆண் என நினைத்து வெட்கத்துடன் நகர்ந்து விட்டனர்!

**ஹைரம் பதக் (இஸ்ரேல்):** ரயில்கள் கால தாமதமாய் ஓடுவது சகஜமாய் இருப்பதால், திட்டப்படி சுற்றுலாத் தலங்களை அடைய முடியாது சிரமம் உண்டாகிறது. ரிசர்வேஷன் கியூவில் நிறைய நேரம் செலவழித்தாலும், ஏமாற்றமே கடைசியில் ஏற்படுகிறது. டூரிஸ்டுகளுக்குச் சரியான தகவல்கள் தரவும் ரயில்கள் தாமதமானால் தங்கவும் ஸ்டேஷன்களில் வசதிகள் இல்லை.''

**ஹியூகோ கன்னிங்ஹாம் (அமெரிக்கா):** பல மொழிகள் பேசும் நாடான இந்தியாவில் மொழிதான் பிரச்னையாய் இருக்குமென நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இங்கே வந்தபின், கம்யூனிகேஷனில் பிரச்னையே இல்லை. சிறு நகரங்களில் கூட, மக்கள் ஆங்கிலம் பேசுகிறார்கள். இது எனக்கு இனிய ஆச்சரியம்!

சந்திப்பு: மௌனஷ்மி
படங்கள்: ர்மணன்



காப்டன் பதவி
சிக்ஸர்களாக அடித்து வெற்றி பெறுவாயாக!




பாம்புக்குக் கீரியா பயப்படும்?
உச்சநீதி மன்ற வழக்கு




வுட்டுப் பாரு! உன் கீரியை என் பாம்பு கொத்தி எடுத்துடும்!
அரிசி பருப்பில் ஏழரை கோடி




சிங்கத்தை அடக்க...
ஜே.வி.பி




# கல்கி

1989 அக்டோபர் 15
மலர் 48 இதழ் 11
சுக்ல புரட்டாசி 29




## காந்தியத்தை மறந்த காந்தி ஜயந்தி!

காந்தி, பள்ளிப் பாடப்புத்தகத்தில் மட்டுமே இருக்கிறார்; நம் இதயங்களில் அல்ல என்பது மீண்டும் ஒரு முறை இந்த காந்தி ஜயந்தியன்று நிரூபிக்கப்பட்டு விட்டது. அக்டோபர் மூன்றாம் தேதி ஹிந்து நாளிதழின் முதல் பக்கத்தைப் பாருங்கள். வலது பக்கம் காந்தி சமாதி மீது ஒரு முதியவர் மலர் தூவுகிறார். இடப்புறம் விவசாயிகள் தலைவர் "மகாத்மா" திகையத், தமக்குப் பிடிக்காத மாற்றுக் கோஷ்டியினரை மேடையிலிருந்து வலுக்கட்டாயமாக இறக்கி, ஓர் ஊழியரைக் கீழே தள்ளி, கும்குத்துக்கள் விட்டு, நையப் புடைக்கிறார்! இந்த இரு புகைப்படங்களுமே போதும், காந்தி ஜயந்தியை நாம் கொண்டாடும் லட்சணத்தைச் சுட்டிக்காட்ட!

சென்னையில் மட்டும் ஒரு கோடி ரூபாய் நல்வாழ்வுத் திட்டங்கள் என்ற முறையில் 14,256 பேருக்கு விநியோகித்திருக்கிறார் முதல்வர். தமிழகம் முழுவதும் மேலும் 18,250 பேருக்கு நாலு கோடி ரூபாய் பெறுமானத்துக்கு உதவி வழங்கப்பட்டுள்ளதாகத் தெரிவித்தார். நலிந்தோருக்கு உதவ வேண்டும்தான்; மறுக்கவில்லை. ஆனால் அந்த உதவி வருடம் முழுதும் வேலை வாய்ப்பு, என்ற முறையில் அமைந்து, கூடுதல் வருவாய் கிடைக்க வழிவகுப்பதாய் இருக்க வேண்டும். பணமும் பொருளும் இலவசமாகப் பெற மக்கள் கையேந்தி, கியூவில் நிற்பதும், நிற்க வைக்கப்படுவதும் இன்றைய அரசியல்வாதியின் வோட்டுப் பிடிக்கும் தந்திரமாக இருக்கலாமேயொழிய மக்களுடைய தன்மானத்தை மதித்ததாகாது. காந்தியம் என்பது இதுவல்ல. அவருடைய சர்க்கா நிற்காமல் சுழன்றது. உழைப்பின் மேன்மையை வலக்கரத்துக்கு உணர்த்தி, அவ்வுழைப்பின் பலனை இடக்கரம் அடையச் செய்தது. சர்க்கா என்பது ஒரு சின்னம். அதன் சுழற்சியைக் குயவனின் சக்கரத்திலும் காணலாம்; ஆலைச் சக்கரங்களிலும் பார்க்கலாம். ஆனால் நம் அரசியல்வாதிகளோ, லோன்மேளாவில் ஆரம்பித்து இலவச அரிசிவரை பலவிதங்களில் மக்களைப் பிச்சைக்காரர்களாக்குகிறார்கள். போதாக்குறைக்குக் 'கடனைத் திருப்பித் தரவேண்டாம்' என்ற எண்ணத்தை இவர்களே உருவாக்கி, மக்களை மோசடி மன்னர்களாகவும் உருமாற்றுகிறார்கள்.

காந்தி ஜயந்தியன்று ஆளுனர் பேசும்போது, "தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியா வந்த காந்தி, இந்தியப் பொருளாதாரம் நொறுங்கிச் சிதறிக் கிடப்பதைப் பார்த்தார்; மக்கள் தன்னம்பிக்கை இழந்து நிற்பதைக் கண்டார்; நாடு தன்மானம் இழந்து விட்டிருப்பதை உணர்ந்தார்; ஆண், பெண் வேற்றுமைகள், ஜாதி வேற்றுமைகள்; வகுப்பு வாதங்கள் ஆகியவற்றால்சமுதாயம் ஏற்றத்தாழ்வுகள் கண்டு பிளவுபட்டிருப்பதை அறிந்து கொண்டார்" என்று கூறியிருக்கிறார். காந்திஜி அந்நியனுடன் போராடி நமக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்து நாற்பத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு காந்தி அன்று கண்ட நிலைமையே இன்றும் நீடிக்கிறது! காரணம் என்ன? தலைவர்கள் காந்தியை காந்தி ஜயந்தியின் போது போலித்தனமாக நினைவு கூர்ந்தாலும் காந்தியத்தை மறந்து விட்டதுதான்.

காந்தியக் கொள்கைகளும், காந்தியப் பொருளாதாரமும், அவற்றின் செயல்பாடுகளும் இன்றைக்கும் இந்நாட்டுக்கு ஏற்றவைதாம். இதனை உலக மகா பொருளாதார நிபுணர்கள் ஒப்புக் கொள்வார்கள். 'இந்தியாவின் ஆன்மா கிராமங்களில் இருக்கிறது' என்றார் மகாத்மா. அங்கே அவர்களுக்கு ஆண்டு முழுவதும் வேலையும், நல்ல வருவாயும் கிடைக்க வேண்டும்; அவர்களுக்குத் தேவையான பொருள்கள் அங்கேயே அகப்பட வேண்டும். அந்தக் குழந்தைகளுக்கு உருப்படியான, வாழ்க்கைக்குப் பயனுள்ள, சிறந்த கல்வி கிடைக்க வேண்டும். வயிற்றுப் பிழைப்புக்காக அவர்கள் பட்டணம் நோக்கிக் குடிபெயர்வது இதன்மூலம் தவிர்க்கப்பட வேண்டும். இவை எல்லாவற்றுக்கும் மேலாகப் 'போதுமென்ற மனமே பொன் செயும் மருந்து' என்பது உணர்த்தப்பட வேண்டும். ஆனால் சூப்பர் கம்ப்யூட்டர் வைத்து, ராக்கெட் விட்டு, ஸ்பெஷல் விமானத்தில் சகல சுகபோகங்களுடன் பறக்கும் தலைவர்கள் எளிய வாழ்க்கையே ஏற்றமிகு வாழ்க்கை என்று மக்களுக்கு எப்படிக் கூறி வழிகாட்ட முடியும்? மக்களின் ஆசையை வளர்ப்பதே அரசியல்வாதியின் காரியமாக இருக்கிறது.

காந்தியத்தை மறந்த காந்தி ஜயந்தி, டீ. வி. பப்ளிசிடிக்காகத் தலைவர்கள் காந்தி சிலைக்கு மாலையிடுகிற காரியமே.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



டெல்லி கணேஷ் கரப்பான் பூச்சியிட மிருந்து தன்னைக் காப்பாற்ற ஆம்படையாளின் உதவியை நாடும் அற்ப ஜீவி போல் காட்சி தந்து அப்புறம் அழுத்தமான ஆழமான குணச்சித்திரமாய் ஊன்றி விட்டார்.

மனோரமா — இந்த மாமி நகைச்சுவை நடிகையா? கணவரின் கையாலாகாத்தனத்தைக் கர்வத்தோடு எடுத்துச் சொல்லும் பெருமை; மருமகனிடம் உதவி கோரலாம் என்று கணவரிடம் வாதாடி அழைத்து வந்து வாங்கிக் கட்டிக்கொண்ட போது, 'என்னை மன்னிச்சிடுங்க. நீங்க சொன்னது சரியாப் போச்சு.' என்று தலைகுனிந்து மன்னிப்புக் கோரும் பதவிசு — ஆஸ்கார் அவார்டு நம்மிடம் இல்லையே — இருந்தால் கொடுத்து விடலாம்!

# படிச்சபுள்ள

ஆக்ஷன் கிங் அர்ஜுன் என்று அழுத்தமாய் விழுந்து விட்ட முத்திரையை மாணவாரியாய் செண்டிமெண்ட்ஸ் கொட்டி மாற்றிக் கொள்ள முனைந்திருக்கிறார் அர்ஜுன். இந்த பெங்களூர்காரர் இத்தனை சுருக்கில் மெட்ராஸ் ஸ்டைலையும் பாஷையையும் அள்ளிக் கொண்டு விட்டாரே, ஆச்சரியம்! செமை தோஸ்துகள் சின்னி ஜெயந்த், செந்தில், லூஸ் மோகன், குள்ளமணி — இந்த ஜமாக்களுடன் குலாவும் போது ஐஸா கில்லாடிதாம்மா. சீதாவிடம் ஜல்சா தூக்கல்தான். சில்க்கை ஓரம் கட்டுவதிலும் ஒரு கிளுகிளுப்பான சிலிர்ப்புதான். ஆனா அந்த டபுள் மீனிங் டயலாக் ஒணுமா பிரதர்! வாத்தியார் தர்மா ஃபைட்டிங்லே சில நியூ ஸ்டைல் காட்ட, சிஷ்யர் ச்சக்குனு புடிச்சிருக்காரு. அர்ஜுனுக்குச் சொந்தப் படமாங்காட்டியும்! 'உசிரைக் குடுத்து'ப் பண்ணிட்டாரும்மா!

அய்யர் வீட்டுப் பெண் சீதா படுபாந்தம். பால்காரக் காசியின் மாட்டுப் பேரும் லட்சுமி; இவர் பேரும் லட்சுமி. இந்த ஒற்றுமையைப் பயன்படுத்திக் காசி உறவு நெருக்கம் காட்டும் போது முதலில் அதிர்ந்து முறுக்கல் காட்டி, காசியின் வெகுளித்தனத்தில் முறுவல் காட்டி.../சீதாவிடம் காண்பது நடிப்பல்ல; அபிநய முத்திரை.

'சிலுக்கிடம் அந்த மெருகு அப்படியே இருக்கிறதே!

ராதாரவி படா அரசியல் வில்லனாம். ஊமை என்று நம்பிக் கொண்டிருந்த சிறுவன் கோர்ட்டில் வாய் திறந்து எதிர் சாட்சி சொல்வது கேட்டு அவர் அதிர்ந்து கூண்டில் சிக்கிய எலியாய்த் தடுமாறுவது கச்சிதம்.

துபாயிலிருந்து வந்த மகன், தன் தாய்க்கு மட்டும் சால்வை போர்த்த, தந்தை வினு சக்ரவர்த்தி, 'எனக்கு ஒண்ணுமில்லையா?' என்று ஏங்க, 'உனக்கு வேற இருக்கு. அப்பறம் தரேன்,' என்று கண்ணடித்து ரகசியமாய் பாட்டிலை நீட்ட, 'யப்பா... சாவறதுக்குள்ள ஒரு வாட்டியாவது ஃபாரின் சரக்கு அடிச்சிடணும்னு பார்த்தேன்..' என்று பூரித்துப் போகும் அந்தத் தனி ஸ்டைல் ஜோர். என்றாலும் நம்முடைய மதுவிலக்கு இந்தக் கதிக்கு வந்து விட்டதே என்ற வருத்தம்தான்.

காமெடி ட்ராக் ஒன்று கட்டாயம் என்கிற மாதிரி எஸ். எஸ். சந்திரன் — கோவை சரளா ஜோடியை ஒட்ட வைத்திருப்பது — கிச்சு கிச்சு மூட்டுகிறேன் என்று கூறி நகத்தால் பிராண்டுவது போலிருக்கிறது.

இத்தனைக்கும் நடுவிலே ஷேடோ ரவி. ஓர் ஆக்ஸிடெண்டில் அம்போவென்று போக இருந்தவரைக் காப்பாற்றிய அர்ஜுனிடம் அப்படியொரு பிடிவாத விசுவாசம் காட்டியவர், அவர்தான் தம் மனைவியின் முன்னாள் காதலர் என்றதும் அத்தனை மூர்க்கமாய் அத்தனை பேரிடமும் குரோதம் காட்டுவதும், அப்புறம் திருந்துவதும் என்னவோ ஒட்டவில்லை. இருந்தாலும் என் நடிப்பில் பழுதுண்டா என்று சவால் விடும் ரவி.

சினிமா கதையை எப்படியோ அமைத்து விட்டுப் போகட்டும். ஆனால் இதுதான் சமுதாயப் பிரச்னை, சீர்திருத்தம் என்று காண்பித்துக் கொள்ள முயல்வதுதான் அபத்தமாக இருக்கிறது.

— பி. எஸ். எஸ்.

# 100%
# உத்தரவாதம்
# உங்கள் டெபாஸிட் தொகைக்கு

**INDU**

வழங்கும் ஒரு நல்ல எதிர்காலத் திட்டம்

## உங்கள் டெபாசிட் தொகை முன்னதாகவே அரசு பத்திரம் மூலமாக வழங்கப் படுகிறது.



கவர்ன்மெண்ட் பாண்டை திருப்பிக் கொடுத்துவிட்டு உங்களது டெபாசிட் தொகையை குறிப்பிட்ட காலத்திற்கு முன்பாகவும் பெறலாம்.

மேலும் விவரங்களுக்கு அணுகவும்: இந்து குரூப் நிறுவனங்கள்.

155, வடக்கு உஸ்மான் சாலை, சென்னை-600 017. போன்: 445529 டெலக்ஸ்: 8868 TANX IN

330, என்.எஸ்.சி. போஸ் ரோட், ஜார்ஜ் டவுன், சென்னை - 600 001. தொலைபேசி: 585901, 585178.

194, வக்கீல் புதுத் தெரு, மதுரை - 625 001. தொலைபேசி: 34940, 31351.

32, வணிகர் தெரு, காஞ்சிபுரம் - 631 501. தொலைபேசி: 3048.

166, கன்னையம்புக்கார வீதி, லாங் பஜார், வேலூர் - 632 004.

106, பெரிய தெரு, திருவண்ணாமலை - 606 601. தொலைபேசி: 2681.

586, ஒப்பணக்காரத் தெரு, கோயம்புத்தூர் - 1. தொலைபேசி: 30993.

ரெஸிடெண்ட் மேனேஜர்கள்

• நாகபட்டினம்-1 எஸ். துரைஅரசன் 8/103, ராஜா ராணி காம்பளக்ஸ், முதல் மாடி, நீலா தெற்கு தெரு, தொலைபேசி: 2547. • கடலூர்-2 டி. ஷண்முகம் M/S. மீனு ஜுவல்லர்ஸ், 2, லாரன்ஸ் ரோடு, தொலைபேசி: 744. • நெய்வேலி-1 ஜி. இளங்குமரன் டி-22, மாணிக்கவாசகர் ரோடு, பிளாக் - 2 • நெய்வேலி-3 திருமதி. வி. சேஸிம 105/டி பிளாட்ஸ், பிளாக் - 6 • நாகர்கோவில்-2 என்.எஸ். சுரேந்திரன் "பங்கஜ் இல்லம்" வெள்ளாள தெரு, எடாலகுடி • தெம்பரம்-2 திருமதி. வி. விசாலம் எண்.4, புரம்பளர்ஸ் தற்காலிக குடியிருப்புகள், அண்ணாமலை நகர் • ராணிபெட்-3 வசந்தி "ராம் நிவாஸ்" பாரதி நகர், சிப்காட் • மயிலாடுதுறை ஜெ. சந்திரசேகரன் 73, செட்டி தெரு • திருவாரூர் திருமதி. சாந்தி, 16, ஐயனார் கோவில் தெரு, திருவாரூர்.

15 வருடக்கால மக்களின் நம்பிக்கை. ✳

# முதுமை

பார்வதி தீர்மானித்து விட்டாள்.
இனிமேலும் இந்தக் குடும்ப பந்தம் வேண்டாம் என்று...

நாற்பது வருட தாம்பத்தியத்தின் முடிவில் ஏற்பட்ட ஒரு வைராக்கியம்! காளஹஸ்தியிலோ வேறு எங்கேயோ ஓர் இல்லம் இருக்கிறதாம். மாதா மாதம் ஐந்நூறு ரூபாய் கொடுத்தால் போதும். நன்றாகக் கவனித்துக் கொள்கிறார்களாம். வாழ்வில் எஞ்சிய சில வருடங்களுக்காவது — பொறுப்புகள் ஏதும் இல்லாமல், எதையும் பற்றிக் கவலைப்படாமல் — அந்தக் காளத்தி நாதன் கால்களில் விழுந்து கிடந்தால் என்ன?

கேட்பவர்களுக்கு அவள் தீர்மானம் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றும்தான். பன்னிரண்டு கிரௌண்ட் பரப்பில் பெரிய பங்களா. கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர வேலையாட்கள். சொன்னதைச் செய்து போட சமையற்கார அம்மாள். நினைத்த இடத்திற்குப் போய் வரக் கார். எதை வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் வாங்க, இருபதினாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் பீரோ லாக்கரில் ரொக்கம்.

ஆனால் பார்வதிக்குக் கிடைக்காதது...
பாசம்... நேசம்... தோழமை.

ஜகதீசன் பிரபல தொழில் நிபுணர். மாதத்தில் அவர் தரையில் உள்ள நேரம் விமானத்தில் பறக்கும் நேரத்தை விடக் குறைவாகத்தான் இருக்கும். அவர் மேல் குற்றம் சொல்ல முடியாது. அவர் பணி புரிந்த நிறுவனங்கள் அத்தனை உழைப்பை அவரிடம் எதிர்பார்த்தன.

ஒன்று மட்டும் சொல்ல வேண்டும். எந்த தேசத்தில் எந்த ஊரில் இருந்தாலும் இரவு ஒன்பது மணிக்கு — இந்திய நேரப்படி — பாரு வீட்டு டெலிஃபோன் ஒலிக்கும். ஜகதீசன்தான் கூப்பிடுவார்.

''பாரு?''
''ஆமாம்...''
''எவ்ரிதிங் ஓ.கே.?''
''உம்...''

இவ்வளவுதான் சம்பாஷணை. அன்பாக, ஆதரவாக, இதயத்தைத் தொடுவது போல் ஒரு சொல் கூட வராது.

பார்வதிக்கு அவரைத் தெரியும். பாசம், பிரியம் இல்லாதவர் இல்லை. அதையெல்லாம் வார்த்தைகளில் வெளிப்படுத்த அவருக்கு நேரம் இருப்பதில்லை.

இரண்டு பிள்ளைகள். இரண்டு பெண்கள்.

பெண்களில் மூத்தவள் அமெரிக்காவில் இருந்தாள். அவள் இருதயம் 'லப் டப்' என



# மயக்கம்

அடித்துக் கொள்ளாது. உற்றுக் கேட்டால் 'டாலர் டாலர்' என்ற சப்தம்தான் கேட்கும். அத்தனை பண வெறி!

அடுத்தவளுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. படிக்கிறாள்.. படிக்கிறாள்... படித்துக் கொண்டே இருக்கிறாள். இந்தப் பல்கலைக் கழகம், அந்தப் பல்கலைக் கழகம் என மாற்றி மாற்றிப் போய்க் கொண்டிருக்கிறாள். அவளுக்கு நிச்சயம் அம்மா, அப்பா ஞாபகம் வரும் — புது வருஷத்தின் போது யார் யாருக்கு வாழ்த்து அனுப்ப வேண்டும் என யோசிக்கும் போது!

மூத்த பிள்ளை ஆஸ்திரேலியாவில் மாமனார் வீட்டில் ஐக்கியமாகி விட்டான். எப்போதாவது இந்தியா வந்தால் — மாமனாருக்குச் சேர வேண்டிய தொகைகளை வசூல் செய்து வங்கியில் கட்டி விட்டு, மறுபடி விமானம் ஏறுமுன் பார்வதியைப் பார்க்க வருவான்.

இரண்டாவது பிள்ளை அரசியல்வாதி... எப்போதும் அரசாங்கத்திற்கு எதிர்க்கட்சி. அவனைப் பற்றிய செய்திகளைப் பத்திரிகையில் படிப்பதோடு சரி, எப்போதாவது தொலைக்காட்சியில் அவன் படத்தைக் காண்பிப்பார்கள். அப்போது பார்வதி பார்ப்பதுடன் சரி.



இந்தக் குடும்பத்தில் அவள் யாருக்கும் தேவை இல்லை என்று புரிந்து விட்டது. இன்னும் எதற்கு இந்தச் சுமை? பேசாமல் உதறி விட்டுப் போகப் பார்வதி நினைத்ததில் தப்பில்லையே!

யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கூடப் போய் விடலாம்தான்! அப்படிச் செய்ய அவள் மனம் ஒப்பவில்லை.

தனக்குப் பரிச்சயமான லேடி டாக்டரிடம் மனம் விட்டுப் பேசினாள். "சௌந்தரம்! நான் வீட்டை விட்டுப் போவதற்கு முன் குடும்பத்தினர் அத்தனை பேரையும் ஒருமுறை பார்க்க விரும்புகிறேன். எல்லோரும் சேர்ந்து ஒரு நாளாவது இருக்க வேண்டும் என்ற பைத்தியக்காரத்தனமான ஆசைதான். எனக்கு உடம்பு சரியில்லை எனத் தந்தி கொடுத்து அவர்களை வரவழைக்கப் போகிறேன். அவர்கள் வரும் போது நீதான் அவர்கள் நம்புகிறாற் போல் பேச வேண்டும்."

டாக்டர் சௌந்தரம் பார்வதியின் மன உளைச்சலைப் புரிந்து கொண்டாள். எல்லோருக்கும் தந்தி போயிற்று.

முதலில் வந்தவன் இரண்டாவது பிள்ளை.

அம்மாவின் பக்கத்தில் அரை மணி உட்கார்ந்ததாகப் பாவனை செய்து விட்டு, மாலையில் தன் கட்சி ஏற்பாடு செய்திருந்த கூட்டத்திற்கு அவன் புறப்பட்டுப் போனான்.

இரண்டு நாட்களில் முதல் பிள்ளை ஆஸ்திரேலியாவிலிருந்து வந்தான்.

டாக்டரைத் தனியாகச் சந்தித்து, "ஏதாவது நம்பிக்கை இருக்கிறதா?" எனக் கேட்டான்.

"எனக்கு இருக்கிறது. உங்களுக்கு?" எனத் திருப்பிக் கேட்டாள் சௌந்தரம்.

இரண்டு பெண்களும் சேர்ந்தாற்போல் மூன்றாம் நாள் வந்து இறங்கினார்கள்.

இளையவள் கேள்விகளை அம்புச் சரமாகத் தொடுக்கச் சரியான பதில் சொல்ல முடியாமல் டாக்டர் சௌந்தரம் திணறிப் போனாள்.

மூத்தவள், "அமெரிக்கா கூட்டிப் போவதால் எந்தப் பலனும் இருக்காது — இல்லையா, டாக்டர்?" எனப் பதிலையும் உள்ளடக்கிய ஒரு கேள்வியைக் கேட்டாள்.

ஜகதீசன் கடைசியில் வந்தார். இரவு பகல் பாராமல் பார்வதி பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் விழிக்கடையில் துளிர்த்த கண்ணீரைக் கண்டதும், "தான் இப்படி நாடகமாடியிருக்கக் கூடாது" எனக் கூடப் பார்வதி நினைத்தாள்.

என்னதான் விலகினாலும் நாற்பது

**மணிராஜ்**



அரசியல்வாதி: நான் புறம்போக்கு நிலத்தில்வீடா கட்டினேன். மக்களின் மகிழ்ச்சிக்காகச் சினிமாத் தியேட்டர்தானே கட்டினேன்!

— எஸ். முகம்மது யூசுப்.

வருட உறவு ஆயிற்றே...

டாக்டர் சௌந்தரம் ஒரு வாரம் கழித்துப் பார்வதியை வீட்டிற்கு அனுப்பி வைத்தாள்.

**அ**ன்று அந்த பங்களாவில்...

பல வருடங்களுக்குப் பிறகு குடும்பம் முழுவதும் அந்தப் பெரிய 'டைனிங் டேபிளில்' உட்கார்ந்திருந்தது.

மெதுவாகத் தான் காளஹஸ்தியில் போய்த் தன் எஞ்சிய காலத்தைக் கழிக்க நிச்சயித்திருப்பதாகப் பார்வதி சொன்னாள். இதற்குத் தன் குடும்பத்தினரிடமிருந்து கடுமையான கண்டனம் ஒருமுகமாக எழும் என அவள் எதிர்பார்த்தாள்.

"நல்ல யோசனை!" என்றான் பெரியவன். "இந்த வயதில் இன்னும் எதற்கு அம்மாவிற்குப் பொறுப்பு? மன அமைதி தான் முக்கியம்!"

"காளஹஸ்தின்னா சொன்னே? நம்ம பார்டி செகரட்டரிகிட்ட ஒரு வார்த்தை போட்டு வைக்கிறேன். அப்பப்போ கவனிச்சுப்பான்!" என்றான் இளையவன்.

"அமெரிக்காவில் இப்படித்தான் அப்பா! ஒரு வயதுக்கு மேலே எல்லோரும் இந்த மாதிரி வாழ்க்கையைத்தான் விரும்புகிறார்கள்..." எனப் பெரியவன் கூடப்பாட...

"உன்னுடைய அட்ரஸைக் கொடு மம்மி... இல்லாவிட்டால் புது வருஷ வாழ்த்து அனுப்பறப்போ நான் திண்டாடிப் போவேன்!" என்றாள் இளையவள்.

ஜகதீசன் மட்டும் வாயைத் திறக்கவில்லை.

அடுத்த இரண்டு நாட்களில் — அவரைத் தவிர — மற்றவர்கள் தங்கள் தங்கள் ஊருக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

காளஹஸ்தி இல்லத்திலிருந்து கடிதம் வந்து விட்டது. திருமதி பார்வதி ஜகதீசனுக்குத் தேவைப்பட்ட சௌகரியங்கள் செய்து கொடுக்க அவர்கள் தயார்.

மறுநாள். ஜகதீசன் காலை எட்டு மணி விமானத்தில் புறப்பட வேண்டும்.

நடு இரவில் விழித்துக் கொண்ட பார்வதி திரும்பிப் பார்த்தாள். பக்கத்தில் ஜகதீசன் இல்லை. ஹாலில் ஏதோ யோசித்தபடி குறுக்கும் நெடுக்கும் உலவிக் கொண்டிருந்தார்.

"என்ன யோசனை? இன்னும் தூங்கவில்லையா? காலை எட்டு மணிக்குப் பிளேன்" — என ஞாபகப்படுத்தினாள் பார்வதி.

"இனிமே தூங்கினால் என்ன? தூங்காட்டா என்ன, பாரு!"

"நான் போறேன்னு சொன்னதிலே கோபமா? வருத்தமா? நான் யார் மேலேயும் கோபித்துக் கொண்டு போகவில்லை. என் நிலைமையைக் கொஞ்சம் புரிந்து கொள்ளுங்கள், ப்ளீஸ்!"

"புரிந்து கொண்டிருக்கிறேன், பாரு... உனக்கு வேண்டியது என்ன என்று எனக்குத் தெரியாமல் இல்லை. நீயும் கொஞ்சம் யோசனை செய்து பார். இன்னும் எத்தனை நாட்கள் என்னால் இப்படி ஓடியாட முடியும்? எப்படியும் ஒரு நாள் இந்த வீட்டில் முடங்கப் போகிறவன்தானே?

"நாளைக்கு என்ன நடக்கும் என்று யாருக்குத் தெரியும்? என் கடைசிக் காலத்திலேயாவது நிம்மதியாக..."

ஜகதீசன் சில கணங்கள் மௌனமாக இருந்தார்.

"பாரு. நான் கோவிலுக்குப் போய் எத்தனை நாட்கள் ஆகியிருக்கும் தெரியுமா?"

பாரு பதில் சொல்லவில்லை.

"வருஷக்கணக்கில் ஆகியிருக்கும். எனக்கே சரியாக ஞாபகம் இல்லை. எனக்கு வேறு கோவில் தேவைப்படவில்லை. இந்த வீடுதான் என் கோவில். எங்கே நான் ஓடினாலும் — எத்தனை நாட்கள் நான் சுற்றினாலும் — இங்கு தங்கும் சில மணி நேரங்கள்தான் எனக்கு நிம்மதி. நீ ஒருத்தி இங்கு இருப்பதால்தான் என் ஓட்டம் இத்தனைச் சீராக இருக்கிறது என நான் நிச்சயம் நம்புகிறேன். தெய்வம் நிரந்தரமாக ஓர் இடத்தில் தான் இருக்கிறது. பக்தர்கள் எப்போதும் தன் பக்கத்தில் இல்லையே என்று தெய்வம் நினைத்தால் எப்படி இருக்கும்?"

"அதெல்லாம் எதற்கு இப்போ! படுக்க வாங்கோ. மணி என்ன ஆகிறது."

"உம்... இன்றைக்கு நீ இருக்கிறாய். கூப்பிடுகிறாய். அடுத்த முறை வரும் போது இப்படி அக்கறை காட்டக் கூட ஆள் இருக்க மாட்டார்கள்."

பார்வதியின் உள் மனம் விழித்தது.

முதல் பெண்ணிற்கு அவள் குடும்பம். இளையவனுக்குப் படிப்பு.. பெரியவனுக்கு மாமனாரே சரணம்.. சின்னவனுக்கு அரசியல்.

அவருக்கு...? அவளைத் தவிர யார் இருக்கிறார்கள்?

இது ஏன் அவளுக்குப் புரியாமல் போயிற்று?

பார்வதி காளஹஸ்திக்குப் போகவில்லை.

தினம் ஒன்பது மணிக்கு வரும் வழக்கமான டெலிபோன் அழைப்பிற்குச் சிரத்தையுடன் காத்துக் கொண்டிருக்கிறாள்.

## யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.

வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும்—இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.



செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்வம் கிளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.

**யூரோக்ளீன்:** உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும்.

**அக்வாகார்ட்:** ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.

உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.

# அயல்நாடுகளை நம்பி வாழும் ஆலய

பொய்க்கால் குதிரைக் கலைஞர் முதல் பூமாலை கட்டுபவர் வரை எத்தனை எத்தனைக் கலைஞர்கள் ஒரு கோவில் திருவிழாவைச் சோபிக்கச் செய்கின்றனர் என்று யோசித்துப் பார்த்தால் வியப்பாய் இருக்கும். இத்தகைய கலைஞர்களுள் விழாவுக்குத் தங்கள் கைத்திறனால் வண்ணமும் வனப்பும் சேர்ப்பவர்கள் 'தொம்பை' என்ற அலங்கார அமைப்புக்களைத் தயாரிப்பவர்கள். உற்சவத் தேரில் தொங்கவிடப்படும் நீண்ட துணித் தூண் போன்ற அமைப்புத்தான் தொம்பை. தேர் அசைந்து ஆடி வரும்போது; இளம் பெண்ணின் ஜடைகுச்சு போல் இதுவும் துள்ளி ஆடி வரும். தேர்த் திருவிழாக் காணக் கொடுத்து வைக்காதவர்கள் இந்தத் தொம்பையைச் சென்னை வள்ளுவர் கோட்டத்தின் கல் தேரில் நிச்சயம் பார்த்திருப்பார்கள்.

கும்பகோணத்தில், தொம்பை தவிர, ஆலவட்டம், வாசல் மாலை, பட்டுக் குடை, பாவட்டா, பன்னாங்கு, ரதமேல் கட்டி போன்ற கோவில் அலங்காரப் பொருட்கள் பலவற்றைத் தயாரித்து வரும் கலைஞர் சாமிநாத பிள்ளை. இவரது கைவண்ணம் இந்தியா முழுவதிலும், இலங்கை, சிங்கப்பூர், அமெரிக்கா போன்ற வெளிநாடுகளிலும் இடம் பிடித்திருக்கின்றது. சில இடங்களில் தெய்வ சந்நிதிகளையும் திருத்தேர்களையும் அலங்கரித்ததோடு பல இடங்களில் வரவேற்பறை காட்சிப் பொருளாகவும் விளங்குகின்றது. சாமிநாத பிள்ளையின் குடும்பம் நான்கு தலைமுறைகளாக இத் தொழிலில் ஈடுபட்டு வருகிறது. ஐந்தாவது தலைமுறையாகப் பணியைத் தொடர இவரது மகன்கள் தயாராகியுள்ளனர்.



கும்பகோணம், நாகேசுவரன் வடக்கு வீதியில் 'சக்ரபாணி பிள்ளை சன்ஸ்' நிறுவனத்தில் சாமிநாத பிள்ளையைச் சந்தித்தோம்:

● தொம்பைகளை என்ன துணியில், எப்படித் தயாரிக்கிறீர்கள்?

சாயம் போகாத பருத்தித்துணிதான் உபயோகிக்கிறோம். இதில் பூக்கள், யானை, அன்னம், பிற டிசைன்கள் எல்லாம் வெட்டிக் கொண்டுவிடுவோம். பிறகு பசை தடவி வேறு நிறத் துணியில் ஒட்டிவிடுகிறோம். இடையில் வண்ணத் துணியில் பாலம் மாதிரி சேர்த்து இணைக்கிறோம். பிறகு பூர்த்தி செய்து, பிரம்பினால் வளையம் தயார் செய்து, தலைப் பகுதியில் உள்ளுக்குள் பொருத்திவிடுவோம். உள்ளே விளக்கு எரியவிட்டால் பிரகாசமாகத் தெரியும்.

● பருத்தித் துணியில் மட்டும்தான் செய்வீர்களா?

சுவாமி புறப்பாட்டுக்கான குடைகள் எல்லாம் வெல்வெட்டு, ஸாட்டின் துணியில் கூடச் செய்கிறோம். அதற்கான ஃப்ரேம், கலசம் எல்லாம் கூட நாங்களே செய்கிறோம். இதற்கு நல்ல உயர்ந்த ஜாதிப் பிரம்பு உபயோகிக்கிறோம். அதாவது வாக்கிங் ஸ்டிக்குக்கு உபயோகிக்கும் பிரம்பு. இந்தக் குடையைக்கூட சாதாரணக் குடை போல, பிரித்து மடக்கக் கூடிய குடை மாதிரியே செய்கிறோம்.

● இந்தப் புராதன ஆலய அலங்காரக் கலையில், தையல் மெஷின்களைக்கூட உபயோகிக்கிறீர்களா?

இப்போது கையினால் தைப்பது இல்லை. உருவத்தில் கண், மற்றும் சில அவயங்களைப் பிரித்துக் காட்ட மட்டுமே கையினால் தைக்கிறோம்.

● பிளாஸ்டிக் கூட உபயோகிக்கிறீர்களா என்ன!

அந்தக் காலத்தில் வெள்ளி ஜரிகை உபயோகித்து வந்தோம். இப்போது பிளாஸ்டிக் தரமானதாக, கறுத்துப் போகாமல் இருக்கிறது. அதனால் தேவையான இடங்களில் உபயோகிக்கிறோம்.

● இதற்கு வேண்டிய டிசைன்கள் எல்லாம் உங்களுக்கு யார் போட்டுத் தருகிறார்கள்?

நானே போட்டுக்கொள்கிறேன். பாரம்பரியமாகக் கற்றுக்கொண்ட டிராயிங் அறிவுதான். (கையிலிருந்த காகிதத்தில், கத்தரிக்கோலால் தாமரை போன்ற வடிவத்தை நொடிகளில் கத்தரித்துக் காண்பித்தார்.)

● இதற்கெல்லாம் நீங்கள் வங்கி உதவியை நாடுவது உண்டா?

இல்லை. பெரும்பாலான கோயில்களில் துணி வாங்கிக் கொடுத்துவிடுகிறார்கள்.

**சின்ன தொம்பை – இப்போது வீடுகளின் வரவேற்பறையில்கூடத் தொங்க விடுகிறார்கள்.**

# அலங்காரக் கலை!



• பாதி வேலை மிஷினில்......

• தமது கைவண்ணங்களை விளக்கும் சாமிநாத பிள்ளை.

கோயில்கள் தம் சொந்த வருமானத்தில் கொடுக்க முடியாதபட்சத்தில், டிரஸ்டுகள் வசூல் மூலம் இம் மாதிரி வேலைகளைச் செய்ய உதவுகிறார்கள். கோயில்கள் தோன்றிய காலத்திலேயே தொம்பை போன்ற அலங்கார அமைப்புக்கள் தோன்றியிருக்க வேண்டும். ஆனால் இப்போதெல்லாம் கோயில்களுக்கான வருவாய் சரியாக வராததால், கோயில் பணிகள் சரிவரச் செய்ய முடிவதில்லை. உற்சவங்களைச் செய்ய இயலுவதில்லை. நித்திய பூஜைக்குக் கூடப் பல கோயில்களில் வழி இருப்பதில்லை. வெளிநாட்டு வேலைகள் வந்து கொண்டிருக்கின்றன. அவைதாம் எங்களைக் காப்பாற்றுகின்றன என்று கூடச் சொல்லலாம்!

"சித்திரைத் திருவிழாவில் சாரங்கபாணி கோயில் முதல் மண்டகப்பணி என்னுடையது!" என்று கூறும் சாமிநாத பிள்ளை, ஆரம்ப நாட்களில் தந்தை பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கையில் ஈடுபட்டு, ஆர்வத்துடன் செயலாற்றியவர். பிறகு காமராஜர் கருத்துகளில் பிடிப்பு ஏற்பட்டு, ஒரு பக்கா காங்கிரஸ்காரராக ஆகிவிட்டார்.

"உங்களுக்கு மாஸ்டர் கிராஃப்ட்ஸ்மேன் விருது எதுவும் இதுவரை வழங்கப்படவில்லையா?"

"சாஸ்திரி பவனிலுள்ள ஆல் இண்டியா ஹாண்டி கிராஃப்ட்ஸ் போர்ட்டுக்கு விண்ணப்பிக்கணும். இதுவரை செய்யவில்லை. அதனால் இதுவரை எனக்கு எந்த அவார்டும் வரவில்லை!" என்ற சாமிநாத பிள்ளை, ஒரு கணம் முகத்தை உயர்த்தி நம்மைப் பார்த்துச் சொன்னார்:

"எனக்குப் பெரிய பாராட்டு, பரிசு எல்லாமே காஞ்சிப் பெரியவர் சங்கராச்சாரியார் அருளும் ஆசிகளும் தான்!"

பேட்டி, கட்டுரை:
சாருகேசி

வண்ணப்படம், புகைப் படங்கள்: யோகா

# அன்புள்ள ஆச்சி...

* மனோரமா வழங்கும் டெலிவிஷன் தொடர் ஒன்று தயாரிக்கப்படவிருக்கிறது. பெயர்: அன்புள்ள ஆச்சி. அதேபோல, நகைச்சுவை நடிகர் சார்லி வழங்கவிருக்கும் தொடரின் பெயர் 'மிஸ்டர் சார்லி.'

* நிழல்கள் ரவி, தம் பெயரை **Raviee** என்றே எழுதுகிறார்.

* சிவாஜியை வைத்து, வியட்நாம் வீடு சுந்தரம் ஒரு படம் டைரக்ட் செய்கிறார். இதில் சிவாஜிக்கு ஊமை வேடம். ஜோடி ராதிகா.

* ஒலியும், ஒளியும் நிகழ்ச்சியில், புதுப் படங்களின் பாடல் காட்சிகளைக் காட்டுவதற்கான கட்டணத்தை, தூர்தர்ஷன் ஐந்தாயிரத்திலிருந்து எட்டாயிரமாக்கி, இப்போது பதினான்காயிரமாய் உயர்த்தி விட்டது. ஆனால், டீ.வி. நிலையத்தாரே ஒளிபரப்பும் பாடல் காட்சிகளுக்குத் தரப்படும் சன்மானம் பல ஆண்டுகளாய் உயர்த்தப்படவேயில்லை! கறுப்பு — வெள்ளை என்றால் ரூ. 250. கலரானால் ரூ. 600!



## சென்னை : செய்திகள் :

* மாம்பலம் ரயில் நிலையம் அருகே உள்ள கரும்புச் சாறு கடையில், காணப்படும் அறிவிப்பு: 'நாங்கள் கழுவிய தம்ளர்களில் ஜூஸ் விற்பனை செய்கிறோம்'' (அதற்கு எக்ஸ்டிரா சார்ஜ் கேட்காமல் இருந்தால் சரி!)



* வடபழனி, விஜயா ஆஸ்பத்திரி வளாகத்தில் உள்ள பிள்ளையாருக்கு 'விஜய வைத்திய விநாயகர்' என்று பெயர்.

* நுங்கம்பாக்கத்தில், ஒரு கட்டடத்தின் முதல் மாடியில் அமைந்துள்ள ஓர் உணவக வாசலில் 'சுவையான உணவுக்கு — பதினெட்டே படிகள்' என்று அறிவித்துள்ளார்கள்.

* பல்லவன் பஸ்ஸில் ஏக நெரிசல். கண்டக்டரோ, முன்னால் நகரும்படி சொல்லிக் கொண்டே இருந்தார். எரிச்சலடைந்த ஒரு பயணி. ''நீங்க பாட்டுக்கு ஈஸியா முன்னால் போகச் சொல்றீங்க! முன்னால் நகர எங்கே இடம் இருக்கிறது?'' என்று கேட்டார். எதேச்சையாய்ப் பின்னால் திரும்பினேன். அங்கே கண்ணில் பட்ட திருக்குறள்:

சொல்லுதல் யார்க்கும் எளிய;
அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.

* சைதாப்பேட்டையில், ஒரு கடையில், டெலிபோன் பேசக் கட்டணம் இரண்டு ரூபாய்! மூன்று நிமிடங்கள் மட்டுமே பேச அனுமதி உண்டு. மேற்கொண்டு மூன்று நிமிடங்கள் பேசினால் அதிகப்படி கட்டணம் ஒரு ரூபாய்! எக்மோரில் ஒரு ஹோட்டலில் அவசரத்துக்கு போன் செய்யப் போனால், மூன்று ரூபாய் தீட்டிவிட்டார்கள்!

தொகுப்பு: ஜூலி.

# பாதுகாப்பு.
# நீண்டகால உழைப்பு.
# அதுவே வீலன்.



பாதுகாப்பு : வீலைன் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டரில் மூன்று பாதுகாப்பு அம்சங்கள் உள்ளன : அளவுக்கு அதிகமாக உஷ்ணமடைவதை தவிர்த்திட ஒரு தெர்மோஸ்டேடிக் டெம்ப்பரேச்சர் கண்ட்ரோல். கூடுதலான அழுத்தத்தை உருகித் தடுத்திட ஒரு ஃப்யூஸிபிள் பிளக். மற்றும் ஒரு பிரஷர் ரிலீஸ் வால்வு.

நீண்ட கால உழைப்பு : இதன் விசேஷமான உட்புறக் கலம், பாதுகாப்பான விட்ரஸ் எனாமல் மூலம் பூசப்பட்டுள்ளது. இது துருப்பிடித்தலுக்கு ஒரு ஒப்பற்ற தடுப்பாகும். இத்தொழில்நுட்பம், அமெரிக்காவில் தயாரிக்கப்படும் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்களில் பயன்படுத்தப்பட்டு, வெற்றி பெற்றுள்ளது.

வீலைன் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்ஸ் வழங்குவோர், வோல்டாஸ், அவை பாதுகாப்பானவை, நம்பகமானவை, நீடித்துழைப்பவை . . . ஆண்டாண்டுகளுக்கும்.

**வீலன்**

ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்





விற்பனைக்கு விடுப்போர் :
**வோல்டாஸ் லிமிடெட்**
அப்ளையன்ஸஸ் பிஸினஸ் குரூப்
19, ஜே.என். ஹெரிடியா மார்க்,
பலார்ட் எஸ்டேட்,
பம்பாய் 400 038

வோல்டாஸ்

**வீலன்**

*நம்பகமான வீட்டுபயோக சாதனங்கள்*

# நடிக்கிறார்கள்

கா.சு. வேலாயுதன்

'...இந்த வீட்டில் எல்லோருமே நடிக்கிறார்கள்...! மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு!' பட்டுப் புடைவை சரசரக்க, பூவினும் மெல்லிய தனது வலது பாதத்தை எடுத்து வைத்து இந்தக் குடும்பத்தில் ஒருத்தியாக வந்து வாய்த்த கடந்த ஒரு மாத காலத்தில் பானு தெளிந்து, தெரிந்த உண்மை இது. இந்த நடிப்புக்கு அச்சாரம் வைத்தது போல் அன்று ரகு தலைகால் புரியாமல் குதித்தான். ஆம், மனத்தின் கோபக் கனலைச் சிவப்பாகத் தாங்கி நின்றது அவனின் நுனி மூக்கு.

''பொட்டைக் கழுதை! பணத்தைத் தண்ணியா செலவு செஞ்சு காலேஜ் அனுப்பினா கண்ட கண்ட சினிமாக் கதைகளைப் பேசிட்டு, படிப்புல கோட்டை விட்டுட்டு வந்து நிற்கிறியே... ச்சீ, உனக்கு வெட்கமாயில்லை...? உனக்குப் படிப்பும் ஒரு கேடுன்னு காலேஜ் அனுப்பினோம் பாரு.. முதல்ல எங்களைப் போடணும்...!''

தான் படித்த காலத்தில் இரண்டு முறை 'அட்டம்ட்' செய்தும் நாலு சப்ஜெக்டில் அரியர்ஸ் வாங்கி, விழி பிதுங்கி பி.யு.சி. யைத் தாண்ட முடியாமற் போன இவன், தன் தங்கை பி.எஸ்.ஸி.யில் ஒரு செமஸ்டரில் ஒரேயொரு பேப்பரில் 'அரியர்ஸ்' வாங்கின காரணத்திற்காகத் 'தாம், தூம்' என்று குதிக்கிறான்!

தன் மடியில் முகம் புதைத்து, நெஞ்சம் விம்மித் தணிய, கடுசொல் தாங்காத வேதனை பீறிட, குமுறி அழும் காஞ்சனாவின் கூந்தலை ஆதரவுடன் வருடி விட்ட பானு, கணவன் ரகுவை ஏறிட்டாள்.

''இப்ப என்ன ஆயிடுச்சுன்னு ஒரேயடியா எரிஞ்சு விழுறீங்க...? எல்லாப் பாடத்துலயும் ஃபர்ஸ்ட் கிளாஸ்ல பாஸ் செய்திருக்கா. ஆனா, கேவலம் ஒரு பாடத்துல மட்டும் 'அரியர்ஸ்' விழுந்துடுச்சு. இந்தச் சாதாரண விஷயத்துக்குப் போய்க் குடியே முழுகிப் போயிட்டாப்புல சத்தம் போடறது உங்களுக்கே நல்லாயிருக்கா...?''

— மெல்லிய குரலில்தான் கேட்டாள்.

உடனே,

''ஒரே சப்ஜெக்ட்டுன்னா சும்மா விட்டுட முடியுமாம்மா? இன்னைக்கு ஒரு சப்ஜெக்ட்டும்பா. அடுத்த செமஸ்டர்ல ரெண்டும்பா. அப்புறம் நாலும்பா.. இதைச் சாதாரணமா இப்படியே விட்டோம்னா அப்புறம் எல்லாமே சாதாரணமா போயிடும்,'' என்று மாமனார் மகனுக்குப் பரிந்து கொண்டு வந்தார்.

''அதுக்காக இப்படியா...? வயசுப் பொண்ணுன்னு கூடப் பார்க்காம...''

''ஆமாம்... நல்ல வயசுப் பொண்ணு...! கடைசி, அதுவும் ஒரே பொண்ணாச் சேன்னு மடியிலயும், தோள்லேயும் தாங்கி இன்னமும் செல்லம் கொடுத்து வளர்த்து வர்றோம் பாரு.. இவளுக்கு அந்தத் திமிரு; இன்னைக்குப் பரீட்சையில் கோட்டை விட்டா, நாளைக்கி வாழ்க்கையிலேயே கோட்டை விட்டுட்டு வந்து நிற்பா...!''

— மாமியாரின் குரலும் தன் மகளைக் கடிந்து கொள்ளும் விதத்தில் ஒலித்ததே தவிர, மகனின் செயலை ஒரு துளியும் கண்டிப்பதாகக் காணோம்.

உண்மையிலேயே இவர்கள் தங்கள் மகளைத்தான் கண்டிக்கிறார்களா...? இல்லை மகனின் செயலுக்குத் துதி பாடுவது போல் நடிக்கிறார்களா...? இப்படி நடிக்க வேண்டிய அவசியம்தான் என்ன? 'வீட்டில் என் மகன் ரகு ராஜ்யம்தான் எல்லாம்...!' — என்று பெண் பார்க்க வந்த போது மாமியார் பீற்றிக் கொண்டதை நிரூபிக்கத்தான் இந்த நாடகமோ...?

''ஆமாம்... இனியும் இவளைக் காலேஜ் அனுப்பினா உருப்பட்டா போலத்தான். பேசாம வீட்ல பத்துப் பாத்திரம் தேய்க்க வைச்சாத்தான் புத்தி வரும்...!'' — கணவனின் குரல் தொடர்ந்தது.

பானு ஒரு முடிவுக்கு வந்தவளாக நிமிர்ந்தாள். இவர்களின் நடிப்பைத் தகர்த்து விடும் வேகம் அவள் கண்களில் மின்னியது.

''சும்மா ஒரேயடியா பேசிட்டே போறீங்களே, மனசுல நீங்க என்னதான் நினைச்சுட்டிருக்கீங்க? எதையும் கண்டிப்பதற்கும் ஒரு தகுதி வேணும்...! இவளை, ஒரு சப்ஜெக்ட்ல அரியர்ஸ் விழுந்துடுச்சுன்னு கடிஞ்சு பேசறதுக்கு, பி.யு.சி. தாண்டாத உங்களுக்கு முதல்ல அருகதையிருக்கா...?''

— அவள் கேட்டதுதான் தாமதம். அறையெங்கும் மயான அமைதி!

ரகு இவளையே சிறிது நேரம் வெறித்துப் பார்த்தான். கோபத்தால் சிவந்திருந்த அவனின் முகம் சட்டென்று அவமானத்தால் கண்டிப் போனது. புது மனைவியின் சொல்லம்பு தாக்கின வேகம் சொல்லவா வேண்டும்...? ஒரே பக்க பலம் அண்ணிதான்

என்ற தைரியத்தில் மடியில் முகம் புதைத்து அதுவரை அழுது கொண்டிருந்த காஞ்சனாவும் இவனின் வார்த்தைகளைக் கேட்டு, தேன் கொட்டினாற் போல் நிமிர்ந்தாள். ரகு, மனைவியையும் தங்கையையும் சிறிது நேரம் வெறித்துப் பார்த்து விட்டு ஏதும் பேசாமல் விடுவிடுவென வாசலை நோக்கி நடந்தான்.

**பா**னு தான் மட்டும் தன் அறைக்குள் தனித்து விடப்பட்டதைப் போன்று உணர்ந்தாள். இவர்களெல்லாம் ரகுவிடம் அடங்கிப் போகுமளவு அப்படியென்ன ஸ்பெஷாலிட்டி...?

பள்ளி ஆசிரியையாக இருந்த தன் அம்மாவைக் கூட, 'குடும்பத்திற்காக, உழவு மாடாக' வேண்டாம் என்று தடுத்து விட்டிருந்தான் ரகு. அவன் அப்பா அந்தக் காலத்திலேயே பி.காம். இன்னமும் பாங்க் ஆபீஸராக இருந்து கொண்டு கையில் இரண்டாயிரத்துச் சொச்சம் சம்பளம் வாங்கினாலும் இளைய மகன் ரகுவின் அபிப்பிராயம் கேட்டுத்தான் எந்தக் காரியமும் செய்வார்!

அடுத்து சிவில் என்ஜினியரான அண்ணா அசோக். இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட சம்பளத்தையும் சுளையாகத் தன் தம்பியிடமே கொடுத்து விட்டுப் போகும் அதிசயம்! அண்ணி மாலதி பி.எஸ்.ஸி.,





● நீண்ட காலம் வாழ எல்லோருக்கும் ஆசை இருக்கிறது. ஆனால் கிழவராக, கிழவியாக மட்டும் வாழ யாருக்கும் ஆசை கிடையாது!

— ஜூலிஸ் ராஸ்டாண்டு.

— இடையகோட்டை ஆசாத்.

பி.எட். அவரும் பள்ளி ஆசிரியையாகப் பணிபுரிந்து வாங்கும் சம்பளத்தை ரகுவிடம் தான் தருகிறார்!

இத்தனைக்கும் ரகு, ஒரு தனியார் நிறுவனத்தில் வெறும் ஆயிரத்தி இருநூறு சம்பளம் வாங்கும் குமாஸ்தா!

'இப்படி வாழ்க்கைக்கு முரண்பட்டு, குடும்பமே இவருக்குக் கட்டுப்பட்டது போல் நடிக்கும் போது நான் ஏன் இவர்களின் நடிப்பை உடைப்பதற்காகக் கணவனை ஒரு கேள்வி கேட்கக் கூடாது?' — அவள் உள் மனம் புழுங்கியது. 'எல்லாம் இந்த அப்பாவைச் சொல்ல வேண்டும்! அவர்தானே பிடிக்காத மாப்பிள்ளைக்குக் கழுத்தை நீட்டச் சம்மதிக்க வைத்தார்...? அம்மாவும் அதற்குத் துதிபாடினாள்...!'

**"சா**ர் போஸ்ட்...!"

— தபால்காரனின் ஓங்கிய குரல் கேட்டுத் தன்னிலைக்கு வந்த பானு, வாசலுக்குப் போனாள். தன் பெயருக்கு வந்திருந்த தபால் உறையை வாங்கிப் பிரித்து, அசந்தாள்.

அவள் மனத்துக்குள் சட்டென்று ஒரு பட்டாம்பூச்சி சிறகு விரித்தது. அது வானுக்கும் பூமிக்குமாக இறக்கை கட்டிக் கொண்டு பறக்காத குறைதான். இந்தச் சந்தோஷ விஷயத்தை உடனே யாருடனாவது பகிர்ந்து கொள்ள வேண்டுமே!

"லெட்டர்... எங்கிருந்து...?"

"எனக்கு... அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர் மாமா...!" — நிறுவனத்தின் பெயரைச் சொன்னாள். "செகந்திராபாத்தில் ஒரு வருஷம் ட்ரெயினிங்காம்... சம்பளம் மாதம் ரெண்டாயிரத்து இருநூறு ரூபாய்...!"

"உன்னோட சந்தோஷத்தைப் பார்த்தா... இப்பவே ஓடிப் போய் இந்த வேலையில ஜாயின் பண்ணிடுவே போலிருக்கே...? வீட்டுக்கு வந்த புது மருமககிட்டே எப்படிச் சொல்றதுன்னு யோசிச்சுட்டு இருந்தேன்.. இந்தக் குடும்ப நலனை உத்தேசித்தாவது நமக்குள்ளே இருக்கிற திரையை உடைக்க வேண்டிய கட்டாயம் உருவாயிடுச்சு...!"

— என்று பீடிகையுடன் எதையோ ஆரம்பித்தவர் அவளை ஏறிட்டார்.

"ம்... சொல்லுங்க..." — என்றாள் அமைதியாக.

"நாங்க முதன் முதலா உன்னைப் பார்க்க வந்தப்ப, பி.எஸ்ஸி. படிச்ச பொண்ணைக் கல்யாணம் செய்துக்க மாட்டேன்னு பிடிவாதம் பிடிச்சான் ரகு. ஆனா நான் உன்னையே அவனுக்கு மனைவியாக்கணும்ன்னு துடிச்சேன். ஏன்...? இந்தக் குடும்பத்தோட சூழ்நிலையையும், ரகுவோட மனநிலையையும் புரிஞ்சுக்கிட்டுக் குடும்பம் நடத்துவேன்னு உன்னைப் பார்த்தவுடனே ஒரு நம்பிக்கை என் மனசுல துளிர் விட்டுருச்சு...!

"ரகுவிற்கு இயல்பிலேயே தன்னம்பிக்கை ரொம்பக் குறைவு. சட்டென்று ஒரு விஷயம் அவன் மனசுல பதியாது. மத்தவங்க அளவுக்கு இவனுக்குப் படிப்பும் ஏறலை. பி.யு.சி.யையே தடுக்கி விழுந்து, எட்டிப் பிடிக்க மூச்சுத் திணறிட்டான். எந்தக் காரியத்தை எடுத்தாலும் 'அதைச் செய்ய முடியுமா...?'ன்னு சதா யோசிப்பானேயொழிய, தீர்வு காண மாட்டான். அதனால சரியான வேலையும் அமையலை.

"இருந்தாலும் அவன் மனசுல வளர்த்துட்டு வர்ற தாழ்வு மனப்பான்மையை முதல்ல ஒழிக்கணும்னு நாங்க எல்லோருமா சேர்ந்து ஒரு முடிவெடுத்தோம். அதன்படி வீட்டுப் பொறுப்பு, அதிகாரம் அத்தனையையும் அவன்கிட்டே படிப்படியா ஒதுக்கினோம். அவன் பேச்சுக்கு முழு மதிப்பு தந்தோம். இதன் மூலமா அவனோட தாழ்வு மனப்பான்மை படிப்படியா விலகி வர்றதைப் பார்த்துச் சந்தோஷப்பட்டோம்.. இதெல்லாம் உனக்கு இப்ப ஏன் சொல்ல வர்றேன்னா...! தன்னை விட அதிகமாப் படிச்சவளை மனைவியா ஏற்றுக்க மறுத்த மனசு, இப்ப மனைவிக்கு வந்திருக்கிற அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரைப் பார்த்து என்ன நினைக்கும்...? அவனோட தாழ்வு மனப்பான்மை விலகிட்டு வர்ற இந்தச் சமயத்துல உனக்குக் கிடைச்சிருக்கிற இந்தப் பதவி என்ன பாதிப்பு ஏற்படுத்தும்...? கொஞ்சம் நல்லா யோசிச்சுப் பாரு...! இந்த வேலைக்கான ஆர்டரை நீ ஏற்காதது நல்லதுன்னு நான் நினைக்கிறேன்...!" — எங்கோ ஒரு குகையிலிருந்து ஒலிப்பது போல் கேட்டது மாமனாரின் குரல். அதற்கு மேல், அங்கு நிற்கப் பிடிக்கவில்லை அவளுக்கு. தனது அறைக்குள் சென்று படுக்கையைத் தஞ்சமடைந்தாள்.

**ர**கு, வீட்டிற்கு வரும் போது இரவு மணி பத்துக்கும் மேலாகி விட்டது. யாருடனும் ஏதும் பேசாமல் படுக்கையில் வந்து விழுந்தான். பானு அவனைக் கண்டுகொள்ளாது திரும்பிப் படுத்தாள்.

சிறிது நேரம் மௌனம். பிறகு அவள் மனசுக்குள் எதுவோ பிசைய ஆரம்பித்தது.

காலையிலிருந்து பாடுபட்ட கணவன், சட்டையைக் கூடக் கழற்றாது அசதி மேலிட, படுக்கையில் விழுந்து கிடக்கிறான். இந்தோ; ஐம்பதோ... அதைச் சம்பாதிக்க அலைகிற

அலைச்சலுக்கு முன் இந்தப் பணம் எம் மாத்திரம்...?

எழுந்து உட்கார்ந்து கணவனை உசுப்பினாள்.

"ம்... என்ன ...?" — மெல்ல முணகினான்.

"சாப்பிடலையா ...?"

"பசிக்கலை... வேண்டாம்...!"

"என் மேல கோபமா...?"

— அவன் பேசவில்லை. பதிலுக்குத் திரும்பினான். அவளையே கூர்ந்து பார்த்தான். விடி விளக்கின் வெளிச்சத்தில் அவன் கண்கள் மின்னின.

"உன் மேல எனக்கென்ன கோபம் பானு.. நீதான் உண்மையில என் மேல கோபப்படணும்..."

— பானு எதிர்பார்த்ததற்கு மாறாகக் கனிவான வார்த்தைகள் அவன் நாவிலிருந்து உதிர, அதிசயித்தாள்.

"பானு... குடும்பத்துல யார்கிட்ட வேணுமானாலும் நடிக்கலாம். ஆனா தாலி கட்டின பெண்டாட்டிகிட்டமே நடிக்கிறது எவ்வளவு முட்டாள்தனம்? பானு, நான் உன்னைக் கைப்பிடிச்சப்பவே மனசுக்கு மனசு முடிச்சுப் போட்டத் தவறிட்டேன். மனசுக்குள்ளேயே ரகசியத்தைப் பூட்டி வச்சுக்கறது பேடித்தனம்.. இந்தத் தப்பை செய்ததுக்காக நீதான் என்னை மன்னிக்கணும்...!" — பானு விழித்தாள்.

"என்ன யோசிக்கிறே...? என்னடா திடீர்னு இப்படிப் பேசறேன்னுதானே...? பானு, இந்த வீட்டை வெளியிலிருந்து பார்க்கிறவங்களுக்கு என் நடவடிக்கை வேடிக்கையாத்தான் இருக்கும். ஆனா உண்மை நிலையை நீ தெரிஞ்சுக்க வேண்டாமா...? கேட்டா உனக்கு ஆச்சர்யமாத்தான் இருக்கும். உண்மையில் நான் இந்த வீட்ல அதிகாரம் செய்யறது, பொறுப்பு வகிக்கிறது எல்லாமே வெறும் வேஷம்தான் பானு...!"

"வர்ற பதினைஞ்சாம் தேதி எங்க சபாவிலே நீங்க நாதஸ்வரம் வாசிக்கணும்!"

"அடேடே! அந்தத் தேதி எனக்கு ஒத்து வராதுங்களே!"

"'ஒத்து' வராட்டியும் பரவாயில்லைங்க, நாதஸ்வரம் மட்டுமாவது வாசிச்சாப் போதும்!"

— மேல்மங்கலம் பத்ரா.



"வேஷமா... என்ன சொல்றீங்க...?"

"ஆமாம்... வேஷம்தான்! இங்கே இருப்பவங்கள்ல படிப்பு, பதவி, சம்பளம், எல்லா விதத்துலயும் தாழ்ந்தவன் நான். பதவி, படிப்பு இரண்டையும் ஒரு பக்கமா ஒதுக்கி வச்சுட்டாலும் பொருளாதார ரீதியில் கணக்கிட்டா என்னோட சம்பளம் என் அண்ணாவும், அண்ணியும் சம்பாதிக்கிற சம்பளத்துல மூணுல ஒரு பங்கு கூட இல்லை. அவங்க அளவுல என்னால சம்பாதிக்க முடியலை. அதுக்கு ஈடுகட்டத்தான் வலுக்கட்டாயமா அவங்க என்கிட்டே கொடுத்த குடும்பப் பொறுப்பை, விரும்பி ஏத்துக்கிட்டேன். அதுக்குக் காரணம் இவங்க பணத்துல குளிர் காயவோ; எல்லோர்கிட்டேயும் அதிகாரம் செலுத்தவோ அல்ல. அவங்க பணத்துக்குப் பதிலா என் உழைப்பால ஈடுகட்டத்தான் நான் இந்த வீட்டுச் சுமையையும் கூடுதலா ஏத்துக்கிட்டேன்...!"

— அவன் சொல்லச் சொல்ல பானுவுக்கு நிலைகொள்ளவில்லை.

...இவருக்கா தாழ்வு மனப்பான்மை...? இவருக்கா தன்னம்பிக்கை இல்லை? பானுவுக்குக் கணவன் மனம் விட்டுப் பேசியது மகிழ்ச்சியைத் தந்தது. மனத்துக்குள் ஒருவித தெளிவு பிறந்தது. இனியும் அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர் விஷயத்தை அவனிடம் மறைப்பது தவறு என்று உணர்ந்தாள். படுக்கைக்கு அடியிலிருந்த நீளக் கவரை உருவி எடுத்தவள், அவன் முன் நீட்டினாள். விளக்கைப் போட்டு விட்டு கவரைப் பிரித்தவனின் கண்கள் வியப்பால் விரிந்தன.

"அடி சக்கை...! அப்பாயின்ட்மெண்டா...? அம்மாடி... பெரிய வேலைதான்...!" — உற்சாகமாகக் கூவியவன் சட்டென்று அவளை இழுத்துத் தன் மடியில் கிடத்தினான்.

"நான் வேலைக்குப் போறதுல உங்களுக்குச் சம்மதமா....?"

— அவனின் சந்தோஷத்தைப் புரிந்து கொண்டும் அவன் நாவிலிருந்து உதிரும் வார்த்தைகளுக்காகக் காதைத் தீட்டினாள்.

"சம்மதமாவா...? சந்தோஷத்துல ஒரு விழாவே எடுத்திடணும் போல இருக்கு... ஏன் இப்படிக் கேட்கிறே... உனக்கு இஷ்டமில்லையா...?"

"இஷ்டம்தான்... ஆனா... உங்க அப்பா...!"

"ஏன் ஏதாவது சொன்னாரா...? அவர் இடக்கிறார்.. அவருக்கென்ன.. போக வேண்டாம்னுதான் சொல்லுவார். இதென்ன அவர் காலமா...? ரெண்டு பேர் சம்பாதிச்சாலே அடிச்சுக்கோ; பிடிச்சுக்கோன்னு இருக்கிற உலகத்துல அல்லல்படப் போறது நாமதானே...? அவரைச் சமாளிக்க நானாச்சு... விடு பிரச்னையை...!"

— என்று பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைத்த ரகு எழுந்தான், சாப்பிடுவதற்கு.



திருநெல்வேலி கல்கி, மங்கையர் மலர், கோகுலம் ஏஜெண்டு ஸ்ரீ கோபாலகிருஷ்ணன் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி பகவதி லக்ஷ்மிக்கும் பம்பாய் ஸ்ரீ உமா மஹேஸ்வரன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி நீலகண்டனுக்கும் விவாஹம் திருநெல்வேலியில் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க,! மணமக்கள்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 32

## இறுதிக் கட்டம்

நந்தினி திரும்பிச் சென்று தனது அறைக்குள் வருவதற்காக ஏற்பட்ட பிரதான வாசலின் கதவைச் சாத்தித் தாளிட்டு வந்தாள். பின்னர், கையில் தீபத்துடன் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசித்தாள்.

மந்திரவாதி ரவிதாஸன் முன்னமே கோரமான முகமுடையவன். முகத்திலும் தலையிலும் புதிதாக ஏற்பட்டிருந்த காயங்களினால் அவனுடைய தோற்றம் மேலும் கோரமடைந்திருந்தது.

நந்தினி அதைப் பார்த்துவிட்டு, "மந்திரவாதி! இது என்ன, உன் உடம்பெல்லாம் புதுக் காயங்கள்?" என்றாள்.

"ராணி! இதிலே தங்களுக்கு வியப்பு என்ன? தங்களைப் போல் நாங்கள் அறுசுவை உண்டி அருந்திப் பஞ்சணை மெத்தையில் சொகுசாய்ப் படுத்துக் காலங் கழிப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்களா? நானும் பரமேசுவரனும் இன்று பிழைத்து வந்திருப்பதே பெரிய காரியம். இறந்து போன பாண்டியச் சக்கரவர்த்தியின் ஆவிதான் எங்களை இன்று உயிரோடிருக்கும்படி காப்பாற்றியது......"

"இல்லை, ரவிதாஸா! இல்லை! அவருடைய ஆவி என்னுடனேயே சதா சர்வ காலமும் இருக்கிறது. ஒரு நாழிகைக்கு முந்திக்கூட என் முன்னால் தோன்றிச் 'சபதத்தை நிறைவேற்றப் போகிறாயா! இல்லையா?' என்று கேட்டது."

"ராணி! அதற்குத் தாங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?"

"சபதத்தை இன்று நிறைவேற்றுவேன்; இல்லாவிடில் உயிரை மாய்த்துக் கொள்வேன் என்று சொன்னேன்."

"அப்படியானால் நாங்கள் ஓடோடியும் வந்ததே நல்லதாய்ப் போயிற்று. இத்தனை காலங் கழித்து நீங்கள் உயிரை மாய்த்துக் கொள்வதில் யாருக்கு என்ன லாபம்? எடுத்த காரியம் அல்லவோ முடிவு பெற வேண்டும்? தங்களால் முடியாது என்றால்..."

"முடியாது என்று யார் சொன்னார்கள்? சபதத்தை நிறைவேற்றுவேன்; அதற்குப் பிறகு என்னுடைய உயிரை மாய்த்துக் கொள்ளுவேன்..."

"வேண்டாம், வேண்டாம், சபதத்தை நிறைவேற்றிய பிறகு தாங்கள் செய்யக் கூடிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. மதுரையில் வீரபாண்டியனுடைய திருக்குமாரனுக்கு உலகமறியப் பட்டாபிஷேகம் செய்தாக வேண்டும்...."

"அதையெல்லாம் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். இன்று இரவு என் வேலை முடிந்து விடும்; என் வாழ்வும் முடிந்து விடும்....."

"ராணி! பழுவேட்டரையருடைய பொக்கிஷத்தில் உள்ள திரவியங்கள் எல்லாம் மலைநாட்டுக்குப் போய்ச் சேர வேண்டும். அதற்குத் தங்கள் உதவி தேவையாயிருக்கிறது!"

"சபதம் முடிந்த பின்னரும் என் கணவரை ஏமாற்றிக் கொண்டு உயிர் வாழச் சொல்கிறாயா, மந்திரவாதி!"

''அம்மணி! தங்கள் கணவர் யார்?''

''உலகறிய என்னை மணந்து, நாடு நகரங்களில் உள்ளவர்களின் பரிகாசங்களையெல்லாம் பொருட்படுத்தாமல், என் ஒவ்வொரு சபலத்தையும் நிறைவேற்றிக் கொண்டு வருகிற உத்தமரைத்தான் சொல்கிறேன்.....''

''ராணி! பழுவேட்டரையர் தங்கள் கணவர் அல்ல. ஒவ்வொரு நாள் இரவும் வீர பாண்டியர் என் கனவில் வந்து தங்களை அவருடைய பட்டமகிஷியாக நடத்தும்படி கட்டளையிடுகிறார்.....''

''மந்திரவாதி! அவர் பேச்சு வேண்டாம். இந்தக் காயங்களெல்லாம் உனக்கு எப்படி ஏற்பட்டன என்று சொல்லவில்லையே?''

''நேற்றிரவு கொள்ளிடக்கரைக் காட்டில் எங்களை ஒரு கிழப்புலி தாக்கியது. கிழப் புலியானாலும் பற்களும் நகங்களும் மிக்க கூராயிருந்தன......''

''எப்படித் தப்பி வந்தீர்கள்?''

''பாண்டிய குமாரருக்குப் பட்டாபிஷேகம் நடத்தினோமே? அந்தப் பள்ளிப்படைக் கோபுரத்தில் இடிந்திருந்த பகுதியை அந்தப் புலியின் பேரில் தள்ளிவிட்டுத் தப்பித்து வந்தோம்......''

''ஐயோ! பாவம்! கிழப் புலியைக் கூட நீங்கள் நேர் நின்று சண்டையிட்டு ஜயிக்க முடியவில்லை......!''

''ஆம், ராணி! ஒப்புக் கொள்கிறோம். அப்படியிருக்கும் போது இளம் புலியாகிய ஆதித்த கரிகாலனை நேருக்கு நேர் எதிர்ப்பது எப்படி? அதனாலேதான் தந்திர மந்திரங்களைக் கையாள வேண்டியிருக்கிறது. தேவி! இன்றிரவு தப்பினால் அப்புறம் நமக்குச் சந்தர்ப்பம் கிட்டப் போவதில்லை. சுந்தரசோழனையும் அருள்மொழி வர்மனையும் பற்றிச் செய்தி வந்துவிட்டால், பிறகு ஆதித்த கரிகாலன் நம்மிடம் அகப்படப் போவதில்லை......'' என்றான் ரவிதாஸன்.

''மந்திரவாதி! அவர்களைப் பற்றி என்ன? ஏதாவது நிச்சயமாகத் தெரியுமா?'' என்று கேட்டாள் நந்தினி.

''இத்தனை நேரம் அவர்களுடைய ஆயுள் முடிந்திருக்கும், சந்தேகமில்லை...''

''நீயும் தேவராளனும் ஈழத்துக்குப் போன போது இப்படிச் சொல்லி விட்டுத்தான் போனீர்கள்.''

''அங்கே அந்த ஊமைப் பைத்தியம் ஓயாமல் எங்களைப் பின் தொடர்ந்து வந்து தொல்லை கொடுத்தது. அதனால்தான் முடியவில்லை......''

''வாணர் குலத்து வீரன் கடலில் மூழ்கி இறந்து விட்டதாகச் சொன்னீர்கள். அவனும் தப்பிப் பிழைத்து வந்து விட்டான்......''

''பள்ளிப்படைக் காட்டில் அவனை வேலை தீர்க்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. தாங்கள் தடுத்து விட்டீர்கள்.''

''அதற்கு முக்கிய காரணம் இருப்பதாகச் சொன்னேன்......''

''அது என்ன முக்கிய காரணமோ தெரியாது. அவன் இங்கே வந்து ஆதித்த கரிகாலனை இரும்புக் கவசம் போல் பாதுகாத்து வருகிறான்.''

''அதைப் பற்றி நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம்.''

''கவலைப்பட்டே தீர வேண்டியிருக்கிறது. இன்று இல்லாவிட்டால் என்றைக்கும் இல்லை. தேவி! என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்? நாங்கள் என்ன செய்ய வேண்டும்?''

''இந்தச் சமயத்தில் நீங்கள் ஒருவரும் இங்கு வராதிருந்தாலே எனக்குப் பெரிய உதவியாயிருக்கும்...''

''அது ஒருநாளும் முடியாத காரியம்.''

''என்னிடம் உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை.......''

''நம்பிக்கை இருப்பதினால்தான் வந்திருக்கிறோம். சபதம் முடிந்த பிறகு தங்களைப் பத்திரமாக அழைத்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கிறோம். எதிர்பாராத தடங்கல் ஏதாவது ஏற்பட்டால் அதற்கும் தயாராயிருப்போம். எந்த நிமிஷமும் தாங்கள் எங்களை உதவிக்கு அழைக்கலாம்.''

''நான் போட்டிருக்கும் திட்டத்தில் தடங்கல் எதுவும் ஏற்படாது. சபதம் முடிந்த பிறகு நான் உயிரோடிருக்கவும் விரும்பவில்லை.''

''கூடவே கூடாது! தாங்கள் எங்களுடன் வந்தே தீர வேண்டும். இல்லையென்றால்....''

''மந்திரவாதி! சபதம் முடிந்த பிறகு ஒரு நிமிஷமும் நான் பெரிய பழுவேட்டரையர் வீட்டில் இருக்க மாட்டேன்...''

''அப்படியானால் நீங்கள் எங்களுடன் வந்து விடுங்கள்!''

''என்னை எப்படி அழைத்துக் கொண்டு போவீர்கள்?''

''இந்தச் சுரங்கப் பாதையின் முடிவில் ஐயனார் கோவில் இருக்கிறது. அதன் அருகில் உள்ள காட்டில் பழுவூர் ராணியின் பல்லக்கைத் தயாராக வைத்திருக்கிறோம். இடும்பன்காரி பல்லக்கைச் செப்பனிடுவதற்கென்று முன்னமே வெளியிலே கொண்டு வந்து விட்டான். வீர பாண்டியனின் தலையைக் கொய்தவனைப் பழி

வாங்கிய தேவியை நாங்களே பல்லக்கில் வைத்துத் தூக்கிச் செல்வோம். பொழுது விடிவதற்குள் கொல்லி மலைக்குப் போய் விடுவோம்.''

''நீங்கள் எத்தனை பேர் இந்த இடத்தில் இருக்கிறீர்கள்?''

''இங்கே நாலு பேர் இருக்கிறோம்!'' என்று கூறி விட்டு ரவிதாஸன் மெதுவாகக் கையைத் தட்டினான்.



ந்த மண்டபத்தில் இருந்த பயங்கரமான செத்த மிருகங்களுக்குப் பின்னால் ஒளிந்திருந்தவர்கள் சிறிது வெளிப்பட்டு முகத்தைக் காட்டினார்கள்.

''பரமேசுவரன் எங்கே?'' என்று நந்தினி கேட்டாள்.

''அவனை வெளியில் நிறுத்தியிருக்கிறேன். ஐயனார் கோவிலில் காளாமுகன் ஒருவன் நிஷ்டை செய்து கொண்டிருந்தான். அவனை அங்கிருந்து போகச் சொல்வது பெரிய தொல்லையாய்ப் போய் விட்டது. மறுபடியும் அவன் அங்கு வந்து விடாமல் பார்த்துக் கொள்ளும்படி தேவராளனைக் கோவில் வாசலில் நிறுத்தி விட்டு வந்திருக்கிறேன்....''

''காளாமுகனைப் பற்றி நமக்கு என்ன கவலை? மந்திரவாதி! பெரிய பழுவேட்டரையரைப் பற்றிய செய்தி தெரியுமா?'' என்று நந்தினி கேட்டாள்.

ரவிதாஸன் சிறிது திடுக்கிட்டு, ''என்ன செய்தி?'' என்றான்.

''அவர் தஞ்சாவூருக்குப் பிரயாணப்பட்டுப் போனார் அல்லவா? வழியில் கொள்ளிடத்தைப் படகில் கடக்கும் போது புயல் அடித்துப் படகு கவிழ்ந்து விட்டதாம். பழுவேட்டரையர் கரையேறவில்லையென்றும், தண்ணீரில் முழுகிப் போய் விட்டதாகவும் சம்புவரையனுக்கு இன்று சாயங்காலம் செய்தி வந்திருக்கிறதாம்!''

தெய்வமே! அவர் கதி அப்படியா ஆயிற்று? இத்தனை நேரம் தாங்கள் இந்த முக்கிய விவரத்தைப் பற்றிச் சொல்லவில்லையே?''

''அதை நான் நம்பவில்லை, மந்திரவாதி! பழுவேட்டரையர் கொள்ளிடத்தில் முழுகி இறந்திருப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை.''

''எனக்கும் அந்தச் செய்தியில் நம்பிக்கை இல்லை, ராணி!''

''அவர் கொள்ளிடத்தின் இக்கரைக்கு நீந்தி வந்திருந்தால் என்ன செய்கிறது? ஒருவேளை இன்றிரவு இங்கு வந்து விட்டால்?.... இதைப் பற்றித் தான் சிறிது கவலைப்படுகிறேன்.....''

''ராணி! அதைப் பற்றித் தங்களுக்குக் கவலை வேண்டாம். இப்போது தான் எனக்கும் நினைவு வருகிறது. கொள்ளிடத்துக்கு அக்கரையில் தஞ்சாவூர்ச் சாலையில் ஆஜானுபாகுவான மனிதர் ஒருவரை நேற்றிரவு பார்த்தேன். ஆடை ஆபரணம் ஒன்றும் அவர் அணிந்திருக்கவில்லை. இருட்டாகவும் இருந்த படியால் அடையாளம் தெரியவில்லை. இப்போது யோசித்தால், அந்த வழிப்போக்கர் ஒருவேளை பெரிய பழுவேட்டரையராகத் தான் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது!''

''அப்படியானால், நிச்சயமாக இன்றிரவு அவர் இங்கே வந்து விட மாட்டார் அல்லவா?''

''மாட்டவே மாட்டார்! அதைப் பற்றித் தாங்கள் தைரியமாக இருக்கலாம். இப்பொழுது எங்களுக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள்?''

''மந்திரவாதி! நீங்கள் இங்கேயே பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். என்னுடைய அறையில் என்ன நடப்பதாகத் தோன்றினாலும், எத்தனை பேருடைய பேச்சுக் குரல் கேட்டாலும் அவசரப்பட்டு உள்ளே வர வேண்டாம். வந்தால் காரியம் கெட்டுப் போகும். நான் குரல் கொடுத்த பிறகு நீங்கள் வந்து சேருங்கள்!''

''ராணி! தாங்கள் எப்படிக் குரல் கொடுப்பீர்கள்?''

''மந்திரவாதி! நான் கலகலவென்று சிரித்துப் பல வருஷம் ஆயிற்று என்று தெரியும் அல்லவா? நான் சிரித்து நீ கேட்டேயிருக்க மாட்டாய்!''

''தேவி! ஒரே ஒரு சமயம் அந்தத் துஷ்ட வாலிபன் வந்தியத்தேவனுடன் பேசிக் கொண்டிருந்த போது நீங்கள் சிரிக்கக் கேட்டேன்.....''

''ஆகா! அதைக்கூட ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாயா? நல்லது! இன்றைக்கு நான் கல கலவென்று உரத்துச் சிரிக்கும் சத்தம் கேட்டால் நீங்கள் இரகசியக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வாருங்கள். காரியம் முடிந்து விட்டதற்கு அது அடையாளம். இப்போதும் வந்தியத்தேவனைப் பார்த்தே நான் சிரித்துக் கொண்டிருந்தாலும் இருப்பேன். அதைப் பற்றி நீங்கள் ஆச்சரியப்பட வேண்டாம்.....''

''தேவி! தங்களுடைய உத்தேசம் என்னவென்பது ஒருவாறு இப்போது எனக்குத் துலங்குகிறது......''

''கொஞ்சம் பொறுத்திருந்தால், எல்லாம் துலாம்பரமாகிவிடும். எதிர்பாராத தடங்கல் ஏதாவது ஏற்பட்டு விட்டால், அப்போது என் அழுகைக் குரல் கேட்கும். உடனே

வந்து சேருங்கள்......''

''அப்படியே செய்வோம், ராணி! ஆனால் தங்கள் அழுகைக் குரலைக் கேட்க நான் விரும்பவில்லை. சிரிப்புக் குரலைக் கேட்கத்தான் விரும்புகிறேன்'' என்றான் மந்திரவாதி ரவிதாஸன்.

## அத்தியாயம் 33

# ''ஐயோ! பிசாசு!''



தே சமயத்தில் வந்தியத்தேவன் மிக்க மனச் சோர்வுடன் கடம்பூர் மாளிகையைச் சேர்ந்த நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அந்த நந்தவனம் மாளிகையின் வெளி மதில் சுவர் ஓரமாக அமைந்திருந்தது. இரவில் மலரும் புஷ்பங்கள் அப்போதுதான் மடலவிழ்ந்து கொண்டிருந்தன. பன்னீர், பாரிஜாதம், மல்லிகை, முல்லை முதலிய மலர்களின் நறுமணத்தை ஐப்பசி மாதத்தின் வாடைக் காற்று அவன் பக்கமாகக் கொண்டு வந்து வீசியது. ''ஆகா! இந்த நேரத்தில் பழையாறை அரண்மனை நந்தவனத்தில் நாம் இருக்கக் கூடாதா? அப்படியிருக்கும் போது திகுரென்று குந்தவை தேவியின் பாதச் சிலம்பு ஒலிக்கக் கூடாதா?'' என்று அவன் மனம் எண்ணமிட்டது. ''இங்கே வந்து இந்தக் கடம்பூர் அரண்மனையில் அடைபட்டுக் கிடக்கிறோமே? வெறிபிடித்த இளவரசரிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறோமே?'' என்று நினைத்தான். ஆதித்த கரிகாலர் என்றுமில்லாதவண்ணம் அன்று மாலை அவன் மீது சீறி எரிந்து விழுந்ததும் ''இனி இன்றைக்கு என் முகத்தில் விழிக்காதே! நாளைப் பொழுது விடிந்தபிறகு உன்னைப் பற்றி என் முடிவைத் தெரிவிக்கிறேன்'' என்று கூறியதும் அவன் மனத்தைப் புண்படுத்தியிருந்தன. ஒரு நாளுமில்லாத விதமாக அவர் இன்று கோபித்துக் கொண்டு விட்டார்! பாவம்! அவர் மீது குறைப்பட்டு என்ன பயன்? அவர் உள்ளம் அவ்விதமாகக் குழம்பிவிட்டிருக்கிறது. அவர் நிலையை நினைத்துப் பார்க்கும் போது வந்தியத்தேவனுக்கு அவர் மீது பரிதாபமே உண்டாயிற்று.



ன்றெல்லாம் ஆதித்த கரிகாலரின் உன்மத்தம் உச்ச நிலையை அடைந்திருந்தது. உற்சாகமும் சோர்வும் கோபமும் குதூகலமும் சிநேகப் பான்மையும் குரோதப் பகைமையும் மாறி மாறி அவரைப் பிடித்து ஆட்டி வைத்தன. அவரும் தம்மைச் சுற்றியிருந்தவர்களை அம்மாதிரி ஆட்டி வைத்துக் கொண்டிருந்தார். அடுத்த நிமிஷம் அவருடைய போக்கு எப்படியிருக்குமோ, என்ன செய்வாரோ என்று அருகிலிருந்தவர்கள் கதி கலங்கிக் கொண்டிருந்தார்கள்.

அன்றைக்குச் சூரியன் உதயமானதிலிருந்து வந்து கொண்டிருந்த செய்திகள் அவருடைய உன்மத்தத்தை அதிகமாக்க உதவி செய்து கொண்டிருந்தன.

சம்புவரையர் முதன் முதலாக அவரிடம் வந்து, திருக்கோவலூர் மலையமான் படை திரட்டிக் கொண்டு வருகிற செய்தியைத் தெரிவித்தார். அதைப் பற்றித் தமது ஆட்சேபத்தையும் கண்டனத்தையும் தெரிவித்துக் கொண்டார்.

''மலையமான் தொண்டு கிழவர்; வயது எண்பதுக்கு மேலாகிறது. அவர் வருவதைக் குறித்து உங்களுக்கு என்ன பயம்?'' என்றார் இளவரசர்.

''ஐயா! கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியின் வம்சத்தில் வந்தவர்கள் நாங்கள். பயம் என்றால் இன்னதென்றே அறியாதவர்கள். தாங்கள் இங்கு விஜயம் செய்திருப்பதைமுன்னிட்டே தயங்குகிறேன். தாங்கள் மட்டும் அநுமதி கொடுத்தால்...''

''கிழவரோடு போர் புரிவதற்கு உடனே புறப்பட ஆயத்தமாயிருக்கிறீர்கள். அவ்வளவுதானே! சம்புவரையரே! என் பாட்டனைப் படையுடன் புறப்பட்டு வரும்படி நான்தான் செய்தி அனுப்பினேன்!''

''எதற்காக, இளவரசே?''

''நான் இங்கே உங்களிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன் அல்லவா? இங்கே இருக்கும்போது எனக்கு ஏதாவது நேர்ந்தால்.....''

''கோமகனே! அப்படிப்பட்ட சந்தேகம் அணுவளவும் தங்கள் மனத்தில் இருந்தால், இந்தக் கணமே......''

''இங்கிருந்து என்னைக் கிளம்பிவிடச் சொல்கிறீர்களாக்கும்!''

''ஐயா! இது தங்களுடைய இராஜ்யம்; இது தங்களுடைய அரண்மனை. இதன் உச்சியில் புலிக் கொடி பறக்கிறது. இங்கிருந்து தங்களைப் போகச் சொல்வதற்கு நான் யார்? தாங்கள் அநுமதி கொடுத்தால் நானும் என் குடும்பத்தாரும் இங்கிருந்து போய்விடுகிறோம். மிலாடுடையார் மலைய



மானை வரவழைத்து வைத்துக் கொண்டு தாங்கள் நிர்ப்பயமாக இங்கே இருக்கலாம்....."

"ஓகோ! வல்வில் ஓரியின் வம்சத்தில் பிறந்த நீங்கள் பயமறியாதவர்கள் என்றும் விஜயாலய சோழரின் குலத்தில் பிறந்த நான் பயங்கொள்ளி என்றும் சொல்லிக் காட்டுகிறீரா?"

"இளவரசரின் வைர நெஞ்சமும் வீர தீரமும் உலகம் அறிந்தவை. பன்னிரண்டாம் பிராயத்தில் தாங்கள் சேவூர்ப் போர்க்களத்தில் புகுந்து பகைவர்களைச் சின்னா பின்னம் செய்து வீராதி வீரன் என்று பெயர் பெற்றீர்கள். பதினெட்டாம் பிராயத்தில் மறுபடியும் போருக்கு வந்த வீர பாண்டியனைத் தொடர்ந்து துரத்திச் சென்று ஒளிந்திருந்த இடத்தில் அவனைக் கண்டு பிடித்து, அவன் சிரத்தைத் துணித்துக் கொண்டு வந்தீர்கள்...."

இதைக் கேட்ட ஆதித்த கரிகாலன் "தெரியும், ஐயா! தெரியும்! ஓடியவனைத் துரத்திய வீரப்புலி நான் என்றும், செத்துப் போன வீர பாண்டியனுடைய தலையை வெட்டிக் கொண்டு வந்தவனென்றும் நீங்கள் எல்லாரும் என்னைப் பரிகசித்துப் பேசுவது எனக்குத் தெரியும்; அந்தப் பழுவூர் மோகினிப் பேய் அத்தகைய வதந்திகளைக் கிளம்பி விட்டிருக்கிறாள் என்பதும் எனக்குத் தெரியும்!" என்று கூறிவிட்டுப் பயங்கரத் தொனியில் சிரித்தார்.

சம்புவரையருக்கு ஏன் இந்த வெறி கொண்ட இளவரசரிடம், பேச்சுக் கொடுத்தோம் என்று ஆகிவிட்டது.

"கோமகனே! நான் எது சொன்னாலும் தவறாகப் போய் விடுகிறது. தங்கள் உசிதம் எப்படியோ அப்படிச் செய்யுங்கள். நான் போய் வருகிறேன்."

"போய் வருவது சரிதான்; ஆனால் இந்தக் கோட்டையை விட்டுப் போகும் எண்ணத்தை மட்டும் விட்டு விடுங்கள். இந்த அரண்மனையில் நான்கு மாதங்களுக்கு முன்னால் நடந்த சதியாலோசனையைப் பற்றிய உண்மையை அறிந்து கொள்ளும் வரையில் நானும் இந்த இடத்தை விட்டுப் போகப் போவதில்லை; நீங்கள் போவதற்கும் விடப் போவதில்லை!" என்றார் ஆதித்த கரிகாலர்.

சம்புவரையரின் உதடுகள் துடித்தன. உடம்பு நடுங்கியது. அவருடைய கண்களில் கண்ணீர் ததும்பியது.



இந்த நிலையைப் பக்கத்தில் இருந்த பார்த்திபேந்திரன் பார்த்தான்.

"கோமகனே! சோழகுலத்தவர் வீரத்திற்குப் புகழ் பெற்றது போலவே நீதிக்கும் பெயர் பெற்றவர்கள். இந்தப் பெரியவருக்குத் தாங்கள் நீதி செய்யவில்லை. தங்கள் வார்த்தைகளினால் அவருடைய மனத்தைப் புண்படுத்துகிறீர்கள். இங்கு நடந்த சிற்றரசர் கூட்டத்தைப் பற்றிச் சம்புவரையர் முன்னமே தக்க சமாதானம் சொல்லித் தாங்களும் ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். தாங்கள் இராஜ்யம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருப்பதாலும், தஞ்சாவூருக்குப் போகவே மறுப்பதாலும், சிற்றரசர்கள் சோழ ராஜ்யத்தின் நன்மையைக் கருதி அடுத்த பட்டத்துக்கு யார் என்பதைப் பற்றி யோசித்தார்கள். தாங்கள் இராஜ்ய பாரத்தை வகிக்க இசைந்தால், அவர்கள் ஏன் வேறு யோசனை செய்ய வேண்டும்? உலகமெல்லாம் வீரப் புகழ் பரப்பிய ஆதித்த கரிகாலர் இருக்கும்போது, போர்க்களத்தையே பார்த்தறியாத மதுராந்தகத் தேவனைப் பற்றி இவர்கள் கனவிலும் கருதுவார்களா?......"

ஆதித்த கரிகாலர் குறுக்கிட்டு, "ஆமாம், ஆமாம்! நான் உயிரோடிருக்கும் போது இன்னொருவன் சோழ சிங்காதனம் ஏறுவது இயலாத காரியந்தான். அதற்காகத்தான் என்னை வேலை தீர்த்து விடப் பார்க்கிறீர்கள்!" என்று கூறி விட்டு மறுபடியும் ஹா ஹா ஹா வென்று உரத்துச் சிரித்தார்.

"பார்த்திபேந்திரா! நீயும் இவர்களுடன் சேர்ந்து கொண்டதை நான் அறியவில்லையென்றா நினைத்தாய்? கந்தமாறனும் நீயும் அன்று நாம் வேட்டைக்குப் போன போது என் பின்னாலேயே வேலைக் குறி பார்த்துக் கொண்டு வந்தது எனக்குத் தெரியாது என்றா நினைத்தாய்? என் உண்மை நண்பனாகிய இந்த வந்தியத்தேவன் மட்டும் தெய்வாதீனமாக இங்கு வந்து சேர்ந்திராவிட்டால், இதற்குள் என்னை யமனுலகத்துக்கு அனுப்பியிருக்க மாட்டீர்களா?" என்று சொன்னார்.

பார்த்திபேந்திரன் வந்தியத்தேவனைக் கண்ணாலேயே கொன்று விடுகிறவனைப் போல் பார்த்துவிட்டு, "ஐயா! இந்தப் பாதகன் ஏதேதோ சொல்லித் தங்கள் மனத்தைக் கெடுத்து விட்டான். தங்களுக்கு நான் மனத்தினாலும் துரோகம் எண்ணியதாக இவன் நிரூபித்து விட்டால், இந்தக் கணமே....." என்றான்.

"அப்பனே! உன் மனத்தில் எண்ணிய துரோகத்தை யார் எப்படி நிரூபிக்க முடியும்? நான் கேட்கும் கேள்விக்குப் பதில்



## அருள்வாக்கு

பெரிய பெரிய கோபுரங்கள், பிராகாரங்களுடன் வெள்ளைக்காரர்களும் பார்த்துப் பிரமித்துக் கொண்டாடும்படியான ஆலயம் மீனாக்ஷிக்கே ஏற்பட்டிருக்கிறது. அங்கே இருக்கிற சிற்பச் செல்வங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. மற்ற க்ஷேத்ரங்களில் ஈசுவரன் பேரிலேயே கோவிலைச் சொல்லி, அதில் இன்ன அம்பாள் ஸந்நிதி இருக்கிறது என்பார்கள். ரொம்பவும் சக்தியோடு ஜீவகளையோடு பாலாம்பாள், கற்பகாம்பாள், மங்களாம்பாள் முதலிய தேவி மூர்த்தங்கள் இருக்கிற கோயில்களைக் கூட வைத்யநாதசுவாமி கோயில் (அல்லது முத்துக்குமாரசுவாமி கோயில்) கபாலீச்வரர் கோயில், கும்பேச்வரசுவாமி கோயில் என்றுதான் சொல்கிறோம். ஆனால் மதுரையில் மட்டும் ஸுந்தரேச்வரர் கோயில் என்று சொல்வதில்லை. மீனாக்ஷியம்மன் கோயில் என்றுதான் சொல்கிறோம். அங்கேதான் ஸுந்தரேசுவரர் அறுபத்தி நான்கு திருவிளையாடல்கள் பண்ணியிருக்கிறார். ஸுந்தரேச்வரரை ஸ்தோத்திரம் பண்ணி, விபூதி மகிமையாலேயே ஞான ஸம்பந்தர் பாண்டியராஜாவின் வெப்பு நோயைத் தீர்த்து, அதுவரை ஜைனனாக இருந்த அவனைச் சைவனாக்கினார். இப்படி நம் தேசத்தில் மறுபடி வைதிக மதம் நன்றாக ஸ்தாபிதமாவதற்கே ஸுந்தரேச்வரர் தான் காரணமாயிருந்திருக்கிறார். ஆனாலும் அவர் பெருமையை எல்லாம் ஒன்றுமில்லை என்று பண்ணிக் கொண்டு அம்பாள் மீனாக்ஷியே அங்கே முக்கியமாயிருக்கிறாள். மீனாக்ஷியம்மன் கோயில் என்றே சொல்கிறோம். சைவாகமங்களின் படி ஈச்வரனின் ஆலயமாகவே உள்ள மதுரையில் மீனாக்ஷியம்மன் கோவில் என்று பெயர் ஏற்பட்டிருப்பது விசேஷம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

சொல்! நீயும் கந்தமாறனும் பழுவூர் இளைய ராணியின் பேச்சைக் கேட்டு மயங்கித்தானே என்னை இங்கே அழைத்து வர இவ்வளவு பிரயத்தனம் செய்தீர்கள்? இதை இல்லையென்று நீ மறுக்க முடியுமா?"

"அதை மறுக்கவில்லை, இளவரசே! மறுக்க வேண்டிய அவசியமும் இல்லை. பழுவூர் ராணி மிக நல்ல நோக்கத்துடனே இந்தக் காரியத்தில் தலையிட்டிருக்கிறார் என்பதை நான் நிச்சயமாய் அறிவேன். தங்களை இங்கு தருவித்துக் கந்தமாறனுடைய சகோதரியைத் தங்களுக்கு மணம் புரிவித்துச் சோழ நாட்டில் எவ்வித உட்கலகமும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதே அவருடைய நோக்கம். தங்களுடைய சிரஸில் சோழகுலத்து மணி மகுடத்தை அணிந்து பார்ப்பதைக் காட்டிலும் எங்களுக்கெல்லாம் மகிழ்ச்சி தரக் கூடியது வேறு ஒன்றுமில்லை. என்னை யாராவது குறை கூறினாலும் பொறுத்துக் கொள்வேன்; பழுவூர் ராணியைப் பற்றி நிந்தை சொன்னால், அவனை அக்கணமே இந்த வாளுக்கு இரையாக்குவேன்!" என்று பார்த்திபேந்திரன் வந்தியத் தேவனைப் பார்த்துக் கொண்டே கூறி, அதே சமயத்தில் வாளையும் உறையிலிருந்து உருவினான்.

"ஆகா! என் வீர நண்பா! வாளை உறையிலே போட்டுவை! நல்ல சமயம் வரும்போது சொல்கிறேன். அப்போது வெளியில் எடுக்கலாம். வந்தியத் தேவன் பழுவூர் ராணியைப் பற்றி ஒன்றும் குறை கூறவில்லை. அவனும் உங்களைப் போலத்தான் மதிமயங்கி நிற்கிறான். உண்மையில், பழுவூர் இளையராணி என் உடன் பிறந்த சகோதரி என்று சத்தியம் செய்து கொண்டிருக்கிறான். அதைச் சொல்வதற்காகவே ஓடோடியும் வந்தான். உன் பேரில் அவன் வேறு குற்றம் சாட்டுகிறான். என் சகோதரனை நீ ஈழ நாட்டிலிருந்து உன் கப்பலில் அழைத்துக் கொண்டு வந்து வழியில் கடலில் தள்ளி மூழ்க அடித்து விட்டாய் என்று அவன் சொல்கிறானே? அதற்கு உன் பதில் என்ன?" என்றார் ஆதித்த கரிகாலர்.

அந்தச் சமயத்தில், "நான் அதற்குப் பதில் சொல்கிறேன்!" என்று கூறிக் கொண்டே கந்தமாறன் அங்கு வந்தான்.

"கோமகனே! மிகச் சந்தோஷமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன். சின்ன இளவரசர் கடலில் முழுகிச் சாகவில்லை. பொன்னியின் செல்வர் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இத்தனை நாளும் மறைந்து இருந்து வந்தாராம். புயல் அடித்துக் கடல் பொங்கி நாகைப்பட்டினம் நகரில் புகுந்தபோது அவர் வெளிப்பட நேர்ந்ததாம். லட்சக் கணக்கான ஜனங்கள் புடைசூழ இப்போது தஞ்சாவூரை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறாராம்!" என்று கந்தமாறன் குதூகலத்துடன் கூறினான்.



ந்தச் செய்தியினால் கரிகாலர் உற்சாகமடைவார் என்று எதிர்பார்த்ததில் அவன் பெரும் ஏமாற்றமடைந்தான். கரிகாலருடைய குரோதம் இப்போது வேறு திசையில் திரும்பியது.

"என்ன? என்ன? அருள்மொழி தஞ்சாவூரை நோக்கிப் போகிறானா? லட்சக்கணக்



"பிறர் நம்மைப் பற்றி என்ன நினைக்கிறார்களோ என்று நினைக்கத் தொடங்கினீர்களானால் அவர்கள் உங்களைப் பற்றி நினைக்காததையெல்லாம் நினைப்பதாக நீங்களே நினைத்துக் கொள்வீர்கள்!" — சோ: தகவல்: ராசா

கான ஜனங்கள் புடைசூழப் போகிறானா? எதற்காக? வல்லவரையா! நீ என்ன சொன்னாய்? இப்போது நடப்பதென்ன? என்னுடைய கருத்தை அறிந்து கொள்ளும் வரையில் அருள்மொழி நாகைப்பட்டினத்திலேயே இருப்பான் என்று சொன்னாய் அல்லவா? இப்போது ஏன் தஞ்சாவூரை நோக்கிப் போகிறான்?....."

வந்தியத்தேவன் குறுக்கிட்டுப் பேசினான்: — "ஐயா! இளையபிராட்டி அவ்வாறுதான் உறுதியாகக் கூறினார். அதற்குப் பின்னர் என்ன காரணம் நேர்ந்ததோ தெரியவில்லை. நான் வேணுமானால் போய்..."

"ஆகா! நீயும் போய் விடுகிறேன் என்கிறாயே? நல்லது, நல்லது! எல்லாருமே என் விரோதிகள் ஆகிவிட்டீர்கள். உங்கள் சூழ்ச்சியெல்லாம் எனக்குத் தெரிகிறது. அருள்மொழி ஏன் தஞ்சாவூரை நோக்கிப் போகிறான் என்று எனக்குத் தெரியும். அது அந்தக் கொடும்பாளூர்ப் பெரியவேளானின் சூழ்ச்சி. அவனுடைய தம்பி மகளை என் சகோதரன் கழுத்தில் கட்டி அவர்களைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டுமென்பது அக் கிழவனுடைய விருப்பம். கொடும்பாளூர் வேளானும் தென்திசைப் படையுடன் தஞ்சையை நோக்கி வருவதாகக் கேள்விப்பட்டேன். என் சகோதரி இளைய பிராட்டியும் இந்தச் சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறாள். ஆமாம்; நீயுங் கூடத்தான்...."

வந்தியத்தேவன் "இளவரசே! மன்னியுங்கள்! பொன்னியின் செல்வருக்காவது இளைய பிராட்டிக்காவது அத்தகைய எண்ணம் சிறிதும் கிடையாது. இது சத்தியம். நான் வேணுமானால் போய் உண்மையை அறிந்து வருகிறேன்!" என்றான்.

"ஆமாம்; நீயும் போய் அவர்களுடைய சூழ்ச்சியில் கலந்து கொள்கிறேன் என்கிறாய்! கந்தமாறா! இவனை உடனே பிடித்து...... இந்த அரண்மனையில் சுரங்கச் சிறை ஏதாவது இருந்தால் அதில் அடைத்து விடு!" என்றதும் கந்தமாறன் வெகு குதூகலத்துடன் வந்தியத்தேவனை அணுகினான்.

உடனே கரிகாலர் தமது கட்டளையை மாற்றிக் கொண்டு, "வேண்டாம், வேண்டாம்! சோழர் குலத்தவர்கள் நீதி தவறாதவர்கள். குற்றம் நிச்சயமாகிற வரையில் தண்டிக்கமாட்டார்கள். வல்லவரையா! இனிமேல் இன்று முழுவதும் என் முகத்தில் விழிக்காதே! அது தான் உனக்குத் தண்டனை! உன்னைத் தஞ்சைக்கு அனுப்புகிறேனா, சிறைக்கு அனுப்புகிறேனா என்பதைப் பற்றி நாளைக்குச் சொல்லுகிறேன்! போ! போ! இனி ஒரு கணமும் இங்கே நில்லாதே! போய்விடு" என்றார்.

கரிகாலருடைய முகத்தை அப்போது வந்தியத் தேவன் பார்த்தான். அவருடைய கடைக் கண்ணின் சமிக்ஞை "இதெல்லாம் விளையாட்டு!" என்று குறிப்பிடுவதுபோல் தோன்றியது. ஆயினும் உன்மத்தம் கொண்டிருந்த இளவரசர் பக்கத்தில் இல்லாமலிருப்பதே நல்லது என்று ஒரு நொடியில் தீர்மானித்துக் கொண்டு வந்தியத் தேவன், "ஐயா! தங்கள் சித்தம் என் பாக்கியம்!" என்று சொல்லிவிட்டு வெளியேறினான்.



ன்னர் அன்று பிற்பகலில் இளவரசரின் கட்டளையின் பேரில் சம்புவரையரும் பார்த்திபேந்திரனும் திருக்கோவலூர்க் கிழாரை எதிர்கொண்டு அழைத்து வருவதற்காகப் போனார்கள் என்று வல்லவரையன் வந்தியத் தேவன் தெரிந்து கொண்டான்.

இளவரசரும் கந்தமாறனும் நெடு நேரம் அந்தரங்கமாக வார்த்தையாடிக் கொண்டிருந்ததையும் அறிந்தான்.

இந்தச் சம்பவங்களெல்லாம் வந்தியத்தேவனுக்கு மிக்க மனச் சோர்வை உண்டாக்கியிருந்தன. மறு நாள் காலையில் இளவரசர் தனக்கு என்ன கட்டளை பிறப்பிப்பார்? தஞ்சாவூருக்குப் போகும்படி பணிப்பாரா? வழியில் பழையாறைக்குப் போகும்படியும் சொல்வாரா? சொன்னால் எவ்வளவு நன்றாயிருக்கும்?.... இந்தக் கடம்பூர் மாளிகை வாழ்வு அவனுக்குப் பிடிக்கவே இல்லை. இங்கே யாரும் உற்சாகமாக இருப்பதில்லை. இங்கே உள்ளவர்கள் எல்லாரும் எப்போதும் எதையோ பறி கொடுத்தவர்களைப்போலிருக்கிறார்கள். அஸ்தமித்து விட்டால் இந்த மாளிகை மனிதர்கள் வாழும் மாளிகையாகவே தோன்றவில்லை. பேய் பிசாசுகள் குடிகொண்டிருக்கும் பாழடைந்த மாளிகையாகத் தோன்றுகிறது. இங்கேயிருந்து எப்போது எப்படிக் கிளம்பப் போகிறோம்?......

இப்படி வந்தியத்தேவன் எண்ணமிட்ட போது ஒரு பெண்ணின் குரல், "ஐயோ! பிசாசு!" என்று அலறியது அவன் காதில் விழுந்தது.

(தொடரும்)

# தன்னம்பிக்கை



□ ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னால் முடியாது என்று ஒரு போதும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள் எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

□ மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும்போது ஆணோ, பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கைதான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிறார்.

ஆனால்.. நம்மில் பலர் ஓரளவு கல்வித்தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத்தயங்குகிறோம்.

தவறாகப் பேசிவிடுவோமோ என்ற பயமும், ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான மூல காரணமாகும்.

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சி முறையை மேற்கொண்டால், தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாடவும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுதவும் உங்களால் முடியும்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப் பயிற்சியை மேற் கொள்ளலாம். நேர் முகப் பயிற்சியும் உண்டு. இன்றே கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண் 4986. 9, மேட்லி ரோடு, தி.நகர். சென்னை.600 017.

NAGA

# கல்கி தீபாவளி மலர் '89



வண்ணப்படம்: ஸ்ரீஹரி.

**நுண்ணிய சிற்ப வேலைப்பாட்டின் பிரமிப்பூட்டும் கலையழகுடன் உருவாகி வருகிறது...**

**வண்ண மடல்களின் வரிசை:**

- **விக்னம் தீர்க்கும் விநாயகர்:**
காஞ்சி முனிவரின் அருள்வாக்குகளுக்கு ஓவியங்கள்: விஜய.

- **ஆப்பிரிக்கக் கானகத்தின் அதிசயங்கள்!**
கட்டுரை, வண்ணப்படங்கள்: கோபுலு.

- **ஸ்ரீசைலம்:**
திருத்தலத்தின் அற்புதமான காட்சிகள்; மல்லிகார்ஜுனர் பிரமராம்பா ஓவியங்கள்: தனுக.

- **இலக்கியத்தில் உடல்:**
கட்டுரை: மீ. ப. சோமு; சித்திரங்கள்: ம. செ.; மாருதி.

- **கலை வளர்க்கும் கரங்கள்:**
தந்தம், மரம், கல், சந்தன மரம் ஆகியவற்றில் அரிய அழகிய சிற்பங்களும் அவற்றை உருவாக்கும் சிற்பிகளும். கட்டுரை: சுப்ரபாலன்; படங்கள்: யோகா.

- **இந்திய நடனக் கலைகள்:**
கட்டுரை: டி. எஸ். பார்த்தசாரதி. பல்வேறு வகை இந்திய நடனங்களின் கண்கவர் தோற்றங்கள்.

- **உலா வரும் இறைவன்**
பக்தர்கள் இறைவனைத் தேடிச் செல்வது மட்டுமா? இறைவனும்தான் நம்மை நாடி வருகிறார்! பரவசத்தில் ஆழ்த்தும் வண்ணப்படங்கள்: தம்பையா.

- **விண்வெளியில் வாயேஜர்:**
பிரமிக்க வைக்கும் வண்ண ஓவியம்: விஞ்ஞானத் தகவல்கள்.

- **நச்சுப்பொய்கை:**
ராஜாஜியின் மகாபாரதக் கதைக்கு வண்ண ஓவியம்: வேதா.

- **கவிதை மடல்:**
வைரமுத்து; இளங்கம்பன்; நா. சி. வரதராஜன், நிர்மலா சுரேஷ் — கண்ணைப் பறிக்கும் வண்ண ஓவியங்களுடன்.

- **கங்கா ஸ்நானம் ஆச்சா?**
என்னுச் செடி, பூவில் தொடங்கி தீபாவளியன்று எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டு விளக்கேற்றுவது வரை 'கேமிரா கட்டுரை': ஸ்ரீஹரி.

- **செங்கமலச் செந்திரு:**
திருமகளின் பல்வேறு தோற்றங்களை வண்ண மடலாக்கித் தருபவர் ஓவியர் எஸ். ராஜம்.

- **குரு பரம்பரை:**
காஞ்சி முனிவர், பீடாதிபதி, இளவல் தவிர, ஸ்ரீரங்கம் ஸ்ரீ ஆண்டவன் சுவாமிகளின் திருவுருவங்கள்.

- **மற்றும்:**
கோகுலம் பக்கங்கள்; மங்கையர் மலர்; ஏராளமான சிறுகதைகள், கட்டுரைகள், புகைப்படங்கள், நகைச்சுவை அம்சங்கள், குறுநாவல்.

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள். அல்லது கல்கி காரியாலயத்துக்கு எழுதுங்கள்.

**விலை ரூ. 30/-**

**பதிவுத் தபாலில் பெற ரூ. 7/- சேர்த்து அனுப்ப வேண்டும்.**

மானேஜர், கல்கி, சென்னை — 600 032.

# ஒற்றுமை நீங்கிடில்...

**தமயந்தி**

**கா**சி வீட்டு மாடிப்படியில் ஏறும் போது மூர்த்திக்கு மனசு முழுக்க அப்பிக் கொண்ட மேகமாய்க் குழப்பம்... காசியிடம் பணம் இருக்குமா? ஒருவேளை இல்லை என்றால்... அம்மா கத்துவாள். பத்து நாளாய் ஏறக்குறைய பட்டினிதான். காலையில் மொத்தமாய் வீட்டின் ஐந்து உருப்படிகளுக்கும் ஒரு தம்ளர் டீ. மத்தியானம் மட்டும் துவையலோடு ரசம் சாதம். ராத்திரிக்குத் திரும்பவும் டீ. இனிமேல் இது கூட கிடைக்காமல் போகலாம். கம்பெனியில் யாரிடமும் பணமில்லை. ஸ்டிரைக்! கூடுதல் போனஸ் கேட்டுப் போராடியதுக்குப் பலனில்லை. கம்பெனி தன் நஷ்டத்தைக் காட்டி நழுவிற்று. பேச்சு வார்த்தைக்கு வரச் சொல்லித் தினமும் ஆள் அனுப்பியது. மூர்த்தி தலைமையில் யூனியன் உறுப்பினர்கள் கூடினார்கள். 'போனஸ் தா. பேச்சு வார்த்தை என்ற பேச்சுக்கே இடமில்லை' என்று அறிக்கை விட்டுக் காலவரையில்லாத வேலை நிறுத்தம்.

நேற்று காலையில் பத்து ரூபாயாவது இருந்தது. விநாயகம் வந்து மகளுக்குச் சுகமில்லை. எக்ஸ்ரே எடுக்கப் பணம் வேண்டும் என்று கேட்ட போது கொடுக்காமல் இருக்க முடியவில்லை.

''எக்ஸ்ரே எடுக்கலைன்னா என்ன நோய்னு கண்டுபிடிக்கறது கஷ்டம்னு டாக்டர் சொல்லிட்டார் மூர்த்தி. பத்ரி, கையிலிருந்த பதினைஞ்சு ரூபாய் அப்படியே எடுத்துக் கொடுத்தான். மீதிக்கு உன் ஞாபகம்தான் வந்துச்சு மூர்த்தி.''

''எங்கிட்ட ரொம்பப் பணமில்லை விநாயகம் ஸார்.''

''பரவால்லப்பா. இருக்கறதைக் கொடு. உங் கஷ்டம் புரியுது. வேலை இல்லாம நாம திண்டாடுறது கடவுளுக்குப் புரியும் மூர்த்தி. தயவு செஞ்சி கொடுப்பா...''

விநாயகம் கைகூப்பி, கண்ணீர் மல்கக் கேட்டது கஷ்டப்படுத்தியது.

''இந்தாங்க ஸார். இதான் இருக்குது. உங்க பொண்ணுக்கு ஒண்ணுமிருக்காது.'' நீட்டின இரண்டு ஐந்து ரூபாய்த் தாள்களில் ஒன்றில் பச்சை நிறமும் வெள்ளை நிறமும் சேர்கிற இடத்தில் எண்ணெய்ப் பசை யார் கைரேகை தடயத்துடனோ இருந்தது.

**கா**சி வீட்டுக் கதவைத் தட்ட லஜ்ஜையாய் இருந்தது. இதுவரை யாரிடமும் கடன் கேட்டதில்லை. என்ன சொல்லி காசியிடம் கேட்க? பணம் இல்லை காசி. தா. கம்பெனி திறந்ததும் தருகிறேன் என்றா? இப்படிக் கேட்டால் தருவானா? எனக்கும் இல்லை மூர்த்தி. என்று கையை விரிக்கலாம்.

வேறென்ன சொன்னால் கட்டாயம் தருவான்? சைக்கிள் ஓவர்—ஆல் பண்ண வேண்டும் என்றால்...? மனுஷர் சாப்பிடுவதற்கே பணமில்லை. நானும் குடும்பஸ்தன் மூர்த்தி. என் மனைவி, அம்மா, குழந்தைக்குச் சோறு போடணும் என்று காசி சொல்லலாம்.

வேறென்ன சொல்ல? அம்மாவுக்குச் சுகமில்லை காசி. அவசரம் என்று சொன்னால் இளகிப் போவான். நிச்சயம் தருவான். பிறகு எப்போதாவது வீட்டுக்கு வரும் போது அம்மாவிடம், ''நல்லாயிருக்கியாம்மா?'' என்று கேட்பான். அம்மா முழிப்பாள். ''என்னாச்சுப்பா காசி எனக்கு?'' என்பாள்.' இல்லை. இது வேண்டாம். பெரியப்பா சீரியஸாம் காசி. அம்மா போகணும்னு துடிக்கிறா. ரூபா... என்று இழுக்கலாம். திரும்பவும் அதே கதிதான் நேரும். வீட்டுக்கு வரும் போது ''உங்க அக்கா மாப்பிள்ளை நல்ல சுகமா?'' என்று காசி அம்மாவிடம் கேட்பான். ''என்னாச்சு அவருக்கு?'' என்று பதில் கேள்வி வரும்.

என்ன செய்ய... அம்மாவிடம் ''ம்மா... காசிகிட்ட பொய் சொல்லி வாங்கியிருக்கேன். அவன் வந்து கேட்டா உளறாதே'' என்று சொல்லி வைத்து விடலாம். இதற்கும் திட்டுவாள். ஆனால் காசே இல்லாமல் போனால் திட்டுவதை விட இது கொஞ்சம் குறைச்சலாகத்தான் இருக்கும்.

மூர்த்தி செருப்பை வாசல் நடையில் கழற்றினான். திறந்திருந்த கதவை லேசாகத் தட்டினான்.

''யாரு?''

''காசி இல்லியா?''

**த**லைசீவிக் கொண்டே அவன் மனைவி கஸ்தூரி வந்தாள். மூர்த்தியைப் பார்த்ததும் பரிச்சயமாய்ச் சிரித்தாள்.

''வாங்க. அவர் யாரையோ பாத்துட்டு வர்றேன்னு போனார். வர்ற நேரம்தான்.

உக்காருங்க.''

வழக்கமான சந்தோஷம் குரலில் இல்லை. ஒரு சுற்று மெலிந்திருந்தாள். கழுத்து எலும்பு துருத்திக் கொண்டு நின்றது. மூர்த்தி வாசல் ஓரமாய் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். உள்ளறை திரைச் சீலை விலக்கி, காசியின் அம்மா வந்தார்.

''வாடாப்பா... ஏதாச்சும் முடிவு தெரிஞ்சுச்சா?''

''ஒண்ணும் தெரிலைம்மா. மேனேஜ் மெண்ட்ல விட்டுக் கொடுக்க மாட்டேங்கிறான். கம்பெனி லாஸ்ல ஓடுதுன்னு காரணம் காட்டுறான். ரெண்டு மாச போனஸ் வருஷா வருஷம் கொடுக்கிறதுக்கு கம்பெனி நஷ்டத்துல ஓடுறதா கணக்கு?''

மூர்த்தியின் குரலில் ஆவேசம் ஏறியது. காசியின் அம்மா நீளமாய்ப் பெருமூச்சு விட்டு, ''என்னமோப்பா... அந்த ஈஸ்வரன் விட்ட வழி'' என்று சொல்லிக் கீழே இறங்கிப் போனாள்.

''பாவம். அத்தைக்கு ரொம்பக் கவலை. தினம் இவர்கிட்டே கம்பெனி திறந்தாச்சான்னு ஆயிரம் தடவை கேக்கறாங்க'' என்றாள் காசியின் மனைவி.

''போயிடலாங்க. ஆனா மனுஷனுக்குச் சுயமரியாதைன்னு ஒண்ணு இருக்குது பாருங்க.''

கஸ்தூரி லேசாய் உதடு விரியாமல் சிரித்தாள். ஸ்வாமி விளக்கை ஏற்றி முன்னறை ஸ்விட்சைத் தட்டி விட்டு மூர்த்திக்கு முன்னால் வந்து உட்கார்ந்தாள்.

''பேச்சு வார்த்தைக்கு வர மாட்டோம்னு சொல்லிட்டீங்க போலிருக்கு?''

''ம்.''

''பேசிப் பார்த்தா என்ன?''

''அவனும் போனஸ் தந்தா என்ன? பேச்சு வார்த்தைக்கு ஒப்புக்கறதே சரண்டர் ஆகிற மாதிரிதான். எங்க யூனியன் இதுக்கெல்லாம் ஒத்துக்காதுங்க. கம்பெனி நஷ்டத்துல ஓடுதாம். ஓடட்டும். வேலை பார்க்கிறவனுக்கு போனஸ் தராதவன் கம்பெனி எப்படி லாபத்துல ஓடும்? யூனியன்னா இளிச்சவாய்னு நினைச்சிட்டாங்க.''

''யூனியன்னா என்னங்க?''

மூர்த்தி சட்டென்று நிமிர்ந்து அவளைப் பார்த்தான். என்ன கேட்கிறாள் இவள்? எதற்காக? விளையாட்டாகக் கேட்கிறாளா? சூட்சுமம் மறைத்தா?

''எதுக்குக் கேக்கறீங்க?''

''சொல்லுங்களேன். யூனியன்னா என்ன அர்த்தம்?''

''ஒற்றுமை.''

''சொல்றேன்னு தப்பா எடுத்துக்காதீங்க. யூனியன்னா தொழிலாளர்கிட்ட மட்டும் நிலவுற ஒற்றுமை இல்லைங்க. தொழிலாளி, முதலாளி ரெண்டு பேர் நடுவிலேயும் நிலவுற ஒற்றுமையும்தான். கம்பெனி நஷ்டத்துல ஓடுதுங்கிறதை நீங்களே ஒத்துக்கறீங்க. அப்ப ஏன் நீங்க எல்லாரும் ஒத்துமையா வேலை செஞ்சு அவுட்–புட் கெவினை ஜாஸ்தியாக்கக் கூடாது?''

''நீங்க சொல்றது புரியலை....''

''பேச்சு வார்த்தைக்குச் சம்மதிங்க. இந்த மாதிரி நாங்க வேலை பார்த்து கம்பெனிக்கு லாபத்தை ஏற்படுத்தித் தந்தா போனஸ் தருவீங்களான்னு நியாயமா கேளுங்க. அக்ரிமெண்ட் போட்டுக்கோங்க. லாபம் வர உழைங்க. போனஸ் வரட்டும்.''

மூர்த்தி கொஞ்ச நேரம் கண் சிமிட்டாமல் அவளையே பார்த்தான். அவன் தப்பாக எடுத்துக் கொள்வானோ என்கிற பயத்தில் கஸ்தூரி தலையைக் குனிந்து கொண்டாள்.

''நஷ்டம்னு தெரிஞ்சும் போனஸ் கேக்கறது நியாயமாப்படலைன்னு தோணினதுனால சொன்னேன். இப்படி தண்ணி கூட இல்லாம தவிக்கிற யூனியன் ஆளுங்க எப்போதும் போல மூணு வேளை சாப்பிடவாவது செய்யலாம். கம்பெனி கஷ்டமில்லாம ஓடினதும் போனஸ் கேளுங்க. அப்படியும் கொடுக்கலைன்னா பிறகு இந்த ஒத்துழையாமை இயக்கம் பத்தி யோசிக்கலாம்.''

மூர்த்தி மலைத்துப் போய் உட்கார்ந்திருக்க வாசல் படியில் யாரோ ஏறுகிற சப்தம் கேட்டது. காசி சோர்வாய் உள்ளே வந்தான்.

''வாடா மூர்த்தி. எப்ப வந்தே?''

''இப்பத்தான்.''



''என்ன விஷயம் மூர்த்தி? ஏதாச்சும் அந்தப் பக்கத்திலிருந்து நியூஸ் வந்துச்சா?''

''பேச்சு வார்த்தைக்குப் போகலாம்ன்னு தோணுது காசி.''

''என்ன திடீர்ன்னு... அதெல்லாம் கூடாதுன்னு நீதான் பயங்கரமா எதிர்த்தே. அக்ரசிவ்வா இருந்தே!''

''ம்... மாறிட்டேன் காசி. யூனியன்னா என்னன்னு புரிஞ்சு போச்சு. தாங்க்ஸ் டு மிஸஸ். கஸ்தூரி காசி.''

காசி ஆச்சர்யமாய்க் கண் விரிய கஸ்தூரியைப் பார்த்தான். ''நிஜமா... உன்னாலேயா?''

அவள் பதில் சொல்லாமல் சிரித்து விட்டு உள்ளே போனாள். மூர்த்தி முகத்தில் தேக்கின கேள்விக்குறியோடு காசி பக்கமாய் உட்கார்ந்தான்.

''எங்கே போயிருந்த காசி?''

காசி முகம் இறுகியது. மெல்லிசாய்ப் புருவம் தடுமாறியது. ''இங்கதான்... பக்கத்துல....''

''ஏதாச்சும் பணம் இருக்குமா காசி... பெரியப்பாவுக்கு சீரியஸ்னு தந்தி வந்திருக்கு. அம்மா போகணும்ங்கிறா...''

''எவ்வளோ வேணும் மூர்த்தி?''

''கிட்டத்தான் ஊர் காசி. ஒரு பத்து ரூபா...''

''பத்து ரூபாதான் இருக்கு மூர்த்தி. அரிசி வாங்கணும். அஞ்சு ரூபா தரவா?''

''ம்...''

ஐந்து ரூபாய் போதும். இன்றைய பொழுதைச் சமாளித்து விடலாம். நாளைக்குப் பேச்சு வார்த்தைக்குப் போக வேண்டும். நிச்சயம் புது வழி ஏற்படும். மூர்த்திக்குள் புது நம்பிக்கை சுடர் விட்டு எழுந்தது.

காசி பாக்கெட்டுக்குள் கை விட்டு ஐந்து ரூபாய்த் தாளை எடுத்து நீட்டினான். நீட்டின ரூபாய்த்தாளில் பச்சை நிறமும் வெள்ளை நிறமும் சேர்க்கிற இடத்தில் எண்ணெய்ப் பசை யார் கைரேகை நடத்துடனோ இருந்தது!



11

# இரண்டாவது சூரியன்

பானுமதி அதிகம் மலைத்துப் போனது மறுநாள் பள்ளிக்குப் போவது பற்றித்தான். உள்ளே காலடி எடுத்து வைத்ததும் துக்கம் விசாரிப்பது போல் கேட்பார்கள். சகலமும் கேட்டுக் கொண்டு டீச்சர்ஸ் ரூமில் உரக்க விவாதிப்பார்கள். வாய் விட்டுச் சிரிப்பார்கள். சிரித்து விட்டுப் போகட்டும். ஆனால் அதிலும் கலந்து கொண்டு விட்டுத் தன்னிடம் வந்து 'உன்னைப் பத்தி என்னவெல்லாம் சொன்னா தெரியுமா... சொல்றதுக்கே கஷ்டமா இருக்கு' என்று வெறுப்பேற்றுவார்கள்.

என்ன சொன்னாளோ என்று வேதனையில் முகம் மாறும். முகம் மாறுவது உடனே குறித்துக் கொள்வார்கள். 'உனக்குக் கஷ்டமா இருந்தா சொல்லலை.' உடனே மடக்கிக் கைபிடித்துக் கேட்கத் தோன்றும். 'நீ வற்புறுத்திக் கேட்கறியேன்னு சொல்றேம்மா.' ஸ்டாஃப்ரூம் உரையாடலை ஒப்பிப்பாள்.

வீடு தேடி வந்து ஒருத்தி பேசினதுக்கே சோர்ந்து போய் விட்டேன். மொத்தப் பள்ளிக்கூடமும் சுத்தி நிற்கும் போது என்ன செய்வோம்.

ஆனால் அவமானம் என்பது சில நாட்கள்தான். பழகும் வரைக்கும்தான். வாழ்க்கையில் இதுதான் முதல் அவமானமா?

இரண்டாவது குழந்தையைக் 'க்ரெஷில்' விட்டு விட்டுப் பள்ளிக்கு ஓடுகிற காலம் அது. குழந்தை காலையிலிருந்தே சோர்வாக இருந்தான்.

பிற்பகல் உடம்பெல்லாம் சிவந்து போய், காதுக்குக் கீழும், முதுகிலும் மணல் பொடியாய் வியர்க்குரு மாதிரி தோன்றி விட, இவன் பள்ளிக்குத் தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயன்றிருக்கிறார்கள். கிடைக்காமல், உடனே அப்ளிகேஷன் பார்த்து, அவனுக்கு ஃபோன் போட்டுப் பேசியிருக்கிறார்கள். உடனே வந்து குழந்தையை எடுத்துப் போகும்படி கட்டளை விட்டிருக்கிறார்கள்.

**பாலகுமாரன்**

கல்லூரியில் இவனுக்கு அப்படி என்ன பேராபத்து என்று புரியவில்லை. நோய்ப் பட்ட குழந்தையைத் தாங்கிக் கொள்ள முடியாத அளவுக்கு என்ன வேலை என்று தெரியவில்லை. நேரே குழந்தையை வாரிக் காரின் பின் சீட்டில் போட்டுக் கொண்டு பள்ளிக்கூடத்துக்கு வந்தான். "இந்த எழவு எல்லாம் நான் கவனிக்கணுமா. அப்படி என்னத்த இங்க கிழிக்கற..." நாலு டீச்சர்கள் முன்னால் கத்தினான்.

அவன் ரௌத்திரம் கண்டு பள்ளிக்கூடம் ஆடிப் போயிற்று. 'அடிப்பாரா... அடிப் பாரா...?' கல்யாணமே செய்து கொள்ளாத டீச்சர் கேள்வி கேட்டுத் துளைத்தெடுத்தாள். மீதி நேரத்துக்கு லீவு சொல்லி விட்டு நேரே டாக்டரிடம் போக, மணல்வாரி என்று சொல்லி விட்டார்கள். ஜுரம் தகித்தது. பதறின டீச்சர் நானும் உனக்குத் துணையாய் வருகிறேன் என்று வீறாப்பாய்க் கிளம்பினாள். வீட்டுக்கு வந்து குழந்தைக்குப் புடைவை தட்டிப் போட்டுப் படுக்கை தயாரித்தாள்.

ஆறு மணிக்கு அவன் வந்த போது கொஞ்சம் கூட விவரணையில்லாமல் அவனைக் குற்றம் சாட்டினாள். பெண்கள் உரிமை பற்றி மேடையில் மட்டும் பேசுவீர்களா என்று கேட்டாள். அடங்கியும் அடங்காது வாதாடினாள். நாலு கேள்விகளுக்குப் பதில் சொன்னவன், சட்டென்று எழுந்து பானுமதி பிடரி பிடித்து வெளியே தள்ளினான். புடைவையுடன் வாரி, குழந்தையை அவளிடம் திணித்தான்.

"போ... அந்த டீச்சர் வீட்டுக்கே போ... எத்தினி நாள் சோறு போடுவா பார்க்கலாம் போடி." அவன் கர்ஜனை நாலு வீட்டுக்குக் கேட்டது.

அந்த டீச்சர் கைப்பையை இடுக்கிக் கொண்டு, கலவரமாய் உடம்பு குலுங்க ஓடியே போனாள். பானுமதி ஐந்து நிமிடம் வரை வாசலில் நின்றிருந்தாள். பக்கத்து வீட்டில் உள்ளே வரச் சொன்னார்கள். மறுத்து விட்டுச் சைக்கிள் ரிக்ஷா பிடித்து அம்மா வீட்டுக்குப் போய்க் குழந்தைக்குத் தெரியாமல் புறக்கடையில் உட்கார்ந்து வாய் விட்டு அழுதாள்.

ஒரு வாரம் லீவு போட்டு இரண்டு தடவை தண்ணீர் விட்டவுடன் பள்ளிக்கூடம் போனாள். அந்த டீச்சர் முகம் கொடுத்தே பேசவில்லை. ஆனால் புருஷன் கொடுமை எல்லா டீச்சருக்கும் கண், காது, மூக்கு வைத்துச் சொல்லப்பட்டிருந்தது. யார் கூடவும் எதுவும் பேச முடியவில்லை. சகஜ நிலைக்கு வர ஒரு மாதமாயிற்று.

இப்போது எத்தனை மாதமாகுமோ

இந்த அவமானம் சகஜமாக எத்தனை வருடமாகுமோ. உணவு முடித்து சிறிது நேரம் விட்டம் பார்த்துப் படுத்துக் கொண்டிருந்தான். எழுந்து பீரோவை அடுக்கினாள். கைப்பையைத் தயார் செய்தாள். பிள்ளைகள் ரிக்ஷாவில் வீட்டுக்குள் வந்தன. ரொட்டி புரட்டிக் கொடுத்ததும் தின்று விட்டுப் பக்கத்து அடுக்கு மாடி வீட்டுக்கு ஓடின. நாகம்மா தோட்டம் முழுக்கக் கொத்திப் போட்டாள். குக்கர் வைத்து விட்டு, கொஞ்ச நேரம் பாடங்கள் சொல்லிக் கொடுத்து விட்டு, டீவிக்கு எதிரே உட்கார்ந்தார்கள்.

அங்கேயும் ஏதோ புருஷக் கொடுமை பற்றி நாடகம். அழுகையும், புலம்பலும், வாசலுக்கு வந்து உட்கார்ந்து கொண்டாள்.

பிள்ளை அருகே வந்து அமர்ந்து மடியில் சாய்ந்து கொண்டான். ஐந்து நிமிடத்தில், அண்ணனைக் காணோம் என்று பெண்ணும் ஓடி வந்து இடதுபுறம் உட்கார்ந்து கொண்டது.

''ஏம்மா ஒரு மாதிரி இருக்கே'' பிள்ளை கேட்டது.

''ஒண்ணுமில்லையே.''

''அப்பா டைவர்ஸ் பண்ணிட்டாரேன்னு கவலையா இருக்கா?''

''ச்சேச்சே... எனக்குத்தான் நீங்க இருக்கீங்களே...''

''பள்ளிக்கூடம் போனா மத்த டீச்சர்லாம் உன்னைக் கேட்பாங்க இல்லை...?''

''கேட்டா கேட்டுட்டுப் போறாங்க.''

''என்னையும் கேட்டாங்கம்மா...''

திக்கென்றது. ''யாரு கேட்டாங்கப்பா...?''

''டீச்சர்.''

''என்ன?''

''பேப்பர்ல பார்த்தாங்களாம். ஏண்டா





டாக்டர்: ஐயோ! உங்களுக்குக் கடுமையான ஜுரம்! உடம்பு நெருப்பாக் கொதிக்குது!

நோயாளி: நல்லாப் பாருங்க டாக்டர்! நீங்க பிடிச்சுக்கிட்டிருக்கிறது என் கையில்லை, டீ கிளாஸ்!

— மேல்மங்கலம் பத்ரா.

எங்கிட்ட சொல்லவேயில்லையேன்னாங்க.''

''ம்ம்...''

''நான் பேசாத நின்னேன். டீச்சர் ஐயோ பாவம்னாங்க. இனிமேயாச்சும் ஒழுங்கா படின்னாங்க. கிளாஸ் முடிஞ்சு போற போது இன்னொரு டீச்சரைக் கூப்பிட்டு என்னைக் காட்டி என்னமோ சொன்னாங்கம்மா...''

''அப்படித்தான் ஏதாவது சொல்வாங்க, ராஜேந்திரா. உதறிடு.''

''அப்ப நீ ஏன் என்னமோ போலருக்கே?''

''டிராமா போரடிச்சுது. வெளியே காத்து நல்லா வருது.''

''அப்பா ஞாபகம் வந்திருச்சா?''

''எது?''

''உன்னைப் போட்டு அடிச்சது. நாங்கள்லாம் அழுதது.''

''இல்ல ராஜு. மறந்துட்டேன் அதெல்லாம்.''

''எனக்கு அடிக்கடி ஞாபகம் வருதும்மா. கனவு கூட வருது. உன்னை அப்பா தலை முடி பிடிச்சு இழுக்கிற மாதிரி. நான் அப்பாவைக் கைல குத்தி இழுக்கிற மாதிரி. ஆனா கனவுல கூட அப்பாவை என்னால தடுக்க முடியலம்மா.''

''ராஜு...'' பானுமதி பிள்ளையை இறுக்கிக் கொண்டாள். மறந்துடு ராஜு. இனி யாரும் உன்னைத் திட்ட மாட்டாங்க.''

''நானும் இப்படி இப்படி உட்கார்ந்துக்குவேம்மா பத்தியானம் சாப்பிட்டுத் தனியா படுத்திடல.''

''ஏன்?''

''சும்மா ஏதாவது யோசிச்சுக்கிட்டு இருப்பேன்.''

''என்ன யோசிப்பே?''

''எனக்கு ஒரு நல்ல அப்பா கிடைச்ச மாதிரி. அவரு உங்கிட்ட பிரியமா, உன் கூட ரொம்ப அன்பா இருக்கற மாதிரி. நம்ம எல்லாரையும் ஆசையா வெளில கூட்டிட்டுப் போற மாதிரி. அவரு முதுகுல நான் குதிரை ஓட்டற மாதிரி. நாமெல்லாம் இங்கிலீஷ்ல பேசற மாதிரி...''

''அட போடா... இதுக்கு அப்பா வேணுமா? நாம பேசுவோம். நாம ஆடுவோம். இப்ப என்ன விளையாடலாம்?''

''எங்கிட்ட ஸ்பேஸ் ட்ரெக் இருக்கும்மா. போன பர்த்டேக்கு நீ வாங்கினது. அது விளையாடலாமா.''

''நான் ரெடி.''

ஓவென்ற கூச்சலுடன் ஆட உட்கார்ந்தார்கள்.

கண் செருகிக் களைத்துப் போன வரைக்கும் ஆடினார்கள்.

நாகம்மா குழந்தைகளுக்குப் படுக்கை தட்டிப் போட, அவர்கள் தூங்கிப் போயினர்.

''இவனைப் பத்திக் கவலையா இருக்கு நாகம்மா.''

''இது உன் கிட்டே வேர் பிடிக்க இன்னும் ஒரு வருஷம் ஆவும். அதுக்குள்ளாற நீ உன்னைச் சரி பண்ணிக்கணும்.''

''என்ன சரி பண்ணிக்கிறதுன்னுதான் தெரியலை.''

''கம்மா தாட்பூட்டுன்னு இருக்கணும். நீ எல்லாத்துக்கும் சோர்ந்து போயிடறே. நகம் கடிச்சு யோசனை பண்றே. நாளைய பாடு நாளைக்கு. இன்னிக்கே உட்கார்ந்து எட்டு நாள் விஷயம் யோசிக்க முடியுமா. உன் சிரிப்புலதான் ஜீவனில்லாமே இருக்கு. இலேசமே காட்டாதே. சட்டுன்னு போய் வாசல்ல உட்கார்ந்தியே... இந்தப் புள்ளை உன்னையே பார்க்குது. ஐயோன்னு ஓடி வருது.''

''தப்புத்தான்.''

''அட சர்தான் போம்மேன்னு தூக்கியெறிஞ்சுடணும். தலையைச் சிலுப்பிக்கிட்டு நிக்கணும்.''

''இத்தனை பட்டும் ராங்கியப் பாரேன்னு வாங்க.''

''ஆமா ராங்கிதான் போடின்னு இடுப்புல கை வச்சு நின்னு ஆமாங்கடின்னு இமிரா சொல்லிப் பாரேன்...'' நாகம்மா நின்று காண்பித்தாள். பானுமதிக்கு அவள் தோற்றம் சிரிப்பு வந்தது. உள்ளே விடிந்தது போல் இருந்தது.

**வி**டியும் போது இன்னும் சந்தோஷமாய் இருந்தது. இன்னிக்குப் பள்ளிக்கூடம். எட்டே கால் பஸ். பெரிய மைதானம். துறுதுறுப்பும் அலட்டலுமாய்ப் பெண் குழந்தைகள். விட்டுப் போன கெமிஸ்ட்ரி பாடங்கள். கைகள்ளின் ப்ளீஸ் என்கிற அதட்டல். கரும்பலகை... சாக்பீஸ், ஸ்பிரிட் வாசனை வரும் லாப்ரெட்டரி. நீராரும் கடலுடுத்த நிலமடந்தை... பாட்டு.

நாலு பஸ் ஸ்டாப் தாண்டியதும் பள்ளிக்கூடம். இறங்கித் திவலை திவலையாய்க் குழந்தைகள் போகும் கூட்டத்தோடு நடந்து பள்ளி காம்பவுண்டுக்குள் நுழைந்தாள்.

படியேறி ரெஜிஸ்ட்ரார் அறைக்குள்

நுழைய...

''ஹலோ பானுமதி.''

''ஹலோ மேம்..''

தன்னைச் சூழ்ந்த கூட்டம் விலக்கி வயதான அந்தப் பெண்மணி பானுமதிக்குக் கை நீட்ட, முன்னேறி மெல்லப் பற்றினாள்.

''எப்படி இருக்கிறாய்?''

''மிக்க நலமுடன்.''

''குழந்தைகள்?''

''அவர்களும்.''

''இன்னும் பிரச்னைகள் ஏதாவது உண்டா?''

''ஒன்றுமில்லை.''

''குட். வெரிகுட். ஐ விஷ்யூ ஆல் த பெஸ்ட்.''

''தாங்க்யூ.''

''பானுமதி, உன் வேலையில் சில மாறுதல்கள்.''

''என்ன மேடம்?''

''கிட்டத்தட்ட உன் பிரச்னைதான் வேறு ஒரு டீச்சருக்கு. ஏமாற்றித் திருமணம் செய்து கொண்டிருக்கிறான். ஏற்கெனவே திருமணமானவன்.''

''யார்...?''

''நைன்த் டீச்சர் சாவித்திரி.''

''ஐயோ! சின்னப் பெண்!''

''அதில் இன்னொரு பிரச்னை என்னவெனில் அவனுக்கு முதல் திருமணம் ஏமாற்றிச் செய்திருக்கிறார்கள். அந்தப் பெண் மனவளர்ச்சி இல்லாதவள்.''

''ஐயோ...''

அவன் இங்கே வந்து கதறி விட்டுப் போய் விட்டான். நாம் என்ன செய்ய முடியும். சாவித்திரி ரௌத்திரமாய் இருக்கிறாள். இரண்டு மாத லீவு கேட்டிருக்கிறாள். ஸோ, அவள் வகுப்புக்கு நீ போக வேண்டும். அநேகமாய் எல்லா முதல் பீரியடுகளும் உனக்கு ஆஃப் அதனால்...''

''நோ ப்ராப்ளம்.''

''வெகு நாளைக்குப் பிறகு உன் முகத்தில் சந்தோஷம் பார்க்கிறேன் பானுமதி. இறைவன் இதை மேலும் மேலும் உனக்கு வழங்கட்டும். பானுமதி, இன்று ப்ரேயரில் நீ பேசுகிறாயா?''

''நானா?''

''பேசு பானுமதி.''

''நம் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு ஏதாவது சொல்.''

குழந்தைகள் வரிசையாகி ஹாலுக்குள் நுழைந்தனர். மேடைக்குப் பத்துப் பெண்கள், கோயர் பெண்கள் வந்தனர்.

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக்
எழில் ஒழுகும்

பானுமதி பிரம்மாண்டமாய்த் தன்னை உணர்ந்தாள்.

சீராரும் வதனமெனத் திகழ்
பரத கண்டமிதில்

உள்ளே சிறிய புன்னகையும் உறுதியுமாய் ஒரு பெண் முகம் வந்தது.

மேடையிலிருந்தபடி எல்லா பெண் குழந்தைகளையும் பார்த்தாள். இதில் யாரெல்லாம் புருஷனிடம் அடிபட்டுக் கதறப் போகிற பெண்கள்...? யோசித்தாள்.

இல்லை இல்லை ஒரு பெண் கூடக் கதறக் கூடாது. ஒரு குழந்தை கூட இம்சைப்படக் கூடாது. எவளும் எதற்கும் பயந்து அலறக் கூடாது.

மென்மையும், மிரட்சியும், சந்தர்ப்பச் சூழ்நிலையில் சிக்கித் தவிக்கிற வேதனையும் எந்தப் பெண் குழந்தைக்கும் வரக் கூடாது.

அத்திலக வாசனை போல்
அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ் மணக்க
இருந்த பெரும் தமிழணங்கே

வாள் உருவிச் சேலை பறக்க யாரோ ஒரு பெண் குதிரையில் தாவியேறினாள். கடிவாளம் சொடுக்கி மிருகத்தை உதைத்துக் கிளப்பினாள்.

உன் சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே

போர் செய். போர் செய்யும் திறன் கொள். நீ அடிமையில்லை. எதிர்த்து நில் எதிர்ப்பை இன்றே பழகு.

பாட்டு முடிய, முன்னேறினாள்.

'குழந்தைகளே' என்று விளித்தாள். குரல் கம்மிற்று...

(தொடரும்)

---

சமையல் எண்ணெய் விலை எக்கச்சக்கமாக ஏறிவிட்டதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையில் சமீபத்தில் அஹமதாபாத்தில் மாதர்கள் ஒரு நூதனமான போராட்டம் நடத்தினார்கள்.

பல் போக்குவரத்து நிறைந்த பகுதியில் அடுப்பு மூட்டிக் கொதிக்கும் வெந்நீரில் பூரியைப் பொரித்து எடுத்தார்கள்.

ஆதாரம்: டைம்ஸ் ஆஃப் இந்தியா.

தகவல்: வி. ந. ஸ்ரீதரன்.



# அறிவுக்கு அப்பால்...

சடசடவென ஏதோ முறிவது போல் சப்தம் கேட்டது.

''வெங்கடேஷ் அதென்ன சப்தம்?''

''ஜோசப் சென்ட்ரிங் அடிச்சுக்கிட்டு இருக்கான். எதையாவது இழுத்துப் போட்டிருப்பான் ஸார்...''

''போய் என்னன்னு பார்த்துட்டுத்தான் வாயேன்...''

பார்க்கப் போனவன் பதற்றத்தோடு ஓடி வந்தான். என்னவாயிற்று? சென்ட்ரிங் அடிப்பவன் எவனாவது விழுந்து விட்டானா?

''ஸார்... நாம போன வாரம் 'கான்கிரீட்' போட்ட 'பீமும்' 'ஸன்ஷேடும்' விழுந்துருச்சு...''

ஓடிப் போய்ப் பார்த்தேன். செங்கல்லும் இறுகிய கலவைத் துணுக்குகளும் சிதறிக் கிடக்க, கான்கிரீட் காலத்திலிருந்து (column) பீமும் ஸன்ஷேடும் தொங்கிக் கொண்டிருந்தன. பக்கத்திலுள்ள 'காலம்' — அதை ஒட்டிய செங்கற்சுவர் உடைந்து கிடக்க — தான் பாதிக்கப்படவில்லை என்று ஹாயாகத் தன் கம்பிகளை வெளியே பரப்பிப் பார்த்துக் கொண்டிருந்தது.

எனக்குள் பயம் பரவியது. நான் என்ன செய்ய வேண்டும்? இதற்குள் 'சைட்டில்' மத்தியானச் சாப்பாட்டுக்கப்புறம் ஓய்வாய் உட்கார்ந்திருந்த வேலையாட்கள் எல்லோரும் வந்து கூடிவிட்டார்கள். எல்லோருடைய முகத்திலும் பயமும் கலவரமும் தெரிந்தது.

''கெட்ட நேரத்திலேயும் ஒரு நல்ல நேரந்தான்; உயிர்ச் சேதம் எதுவும் ஆகலியே...'' கூட்டத்தில் ஒருவன் திருப்தியாய்ச் சொல்லிக் கொண்டிருந்தான்.

மெடிக்கல் ஷாப்பிற்கு ஓடிப் போய், 'ஒரு போன் பண்ணிக்கட்டுமா?' என்று கேட்கவும், 'ரெண்டு ரூபா சில்லறை இருக்கா?' என்று ரொம்பவும் கறாராகப் பேசினர். பின்பு போன் பண்ணுவதற்கு அனுமதி கிடைத்தது. நம்பரைச் சுழற்றினேன்.

காண்ட்ராக்டரின் குரலில் அடர்த்தியான தூக்கம் இருந்தது; இந்த நேரத்தில் பிடிவாதமாய்த் தொந்தரவு செய்பவன் மேல் கோபம் இருந்தது. விஷயம் சொன்னதும் தூக்கம் பறந்து போய் அதிர்ந்தார். ''யாருக்கும் ஒண்ணும் ஆகலியே...'' என்று கேட்டுக் கொண்டு உடனே வருவதாய்ச் சொல்லி, போனை வைத்து விட்டார்.

சைட்டுக்கு வந்து சோர்ந்து உட்கார்ந்து கொண்டேன். இங்கு வேலைக்கு வந்து மூன்று மாதங்கள்தான் ஆகின்றன. அதற்குள் இப்படியோர் அசம்பாவிதம்!

இரண்டு நாட்களுக்கு முன்னால் காண்ட்ராக்டர் 'சைட் விசிட்' வந்து கத்திவிட்டுப் போனது ஞாபகம் வந்தது. ''என்னய்யா.... எல்லாரும் பில்டிங்கைச் சுத்திச் சுத்தி வந்து கும்மி அடிக்கிறீங்களா? சைட்ல வேலை ஆன மாதிரியே தெரியலையே! இங்கே பாருப்பா, நீ என்ன பண்ணுவியோ, ஏது பண்ணுவியோ எனக்குத் தெரியாது; வர்ற வெள்ளிக்கிழமை ஒரு பகுதியாவது எனக்கு ரூஃப் கான்கிரீட் போட்டாகணும்....'' காரில் ஏறிப் போய்விட்டார்.

''ரூஃப் சென்ட்ரிங் அடிக்குறதுக்குக் கொம்பு எப்படி ஸார் பத்தும்? நீங்க ஒரு பக்கம், நான் ஒரு பக்கம் அவரு ஒரு பக்கமா நின்னு கையை விரிச்சாத் தாங்கிக்க முடியும்? அவர் பாட்டுக்கு வந்து ஏதோ நாமெல்லாம் சும்மா இருக்கிறது மாதிரி கத்திட்டுப் போறாரு...'' கோபப்பட்ட ஜோசப்பிடம் நான்தான் இன்றைக்கு விழுந்துவிட்ட பீம் ஸன்ஷேடு சப்போர்ட்டிலிருந்து ஒன்றிரண்டு உருவி அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்ளச் சொன்னேன்.

பீமுக்குக் கம்பி பத்தாததால்தான் விழுந்துவிட்டதென்று ஒருவன் குறைப்பட்டுக் கொண்டிருந்தான்.

''தண்ணி ஊத்துறவ சரியில்ல; எப்பப் பாரு சூபர்வைசர்கிட்டே கொனட்டிக் கொனட்டிப் பேசிட்டிருக்கா. கான்கிரீட்டுக்குத் தண்ணிதான் இரத்தம் மாதிரி. முழுசா மூணு தடவைகூட அவ(ள்) இந்த பீமுக்குத் தண்ணி ஊத்தலியே; அதான் பொலபொலவன்னு உதிர்ந்திடுச்சு...'' தண்ணீர் ஊற்றுபவளும் இன்னொரு சித்தாளும் அசிங்கமான வார்த்தைகளால் சண்டை போட்டுக் கொள்ளத் தொடங்கினர்.

செங்கற்சுவர் கட்டிய மேஸ்திரியை ஒருவன் குற்றஞ்சாட்டினான். ''ஏதோ கடனுக்குக் கலவையைத் தூவிக் கல்லை அடுக்கிக்கிட்டுப் போனா எப்படி? உதிர்ந்திருக்கிற கலவைல எதிலயாச்சும் உசிரு இருக்கான்னு பாரு....''

''வாரத்துக்கு ஒண்ணு, இதை மாதிரி ஏதாவது நடந்துக்கிட்டுத்தான் இருக்கு; போன வாரம் கம்பி கட்றவன் விழுந்தான்; மூணு வாரத்துக்கு முந்தி கட்டின சாரம் அப்படியேசரிஞ்சிடுச்சு;ஏன் நாலுநாளைக்கு முன்னால வெங்கடேஷ் ஸாருக்குக் கால்ல

சுப்ராஜ்



* பாட்டர்ஸனின் வேகப்பந்து வீச்சை வெற்றிகரமாகச் சமாளித்த ஸ்ரீகாந்த் — கபில் ஜோடி.

## பந்து வீச்சின் வேகத்தை அளக்க....

புதுதில்லியில் 'Startart Software' நிறுவனம் பாஸ்ட் பௌலர்களின் வேகத்தை நிர்ணயிக்க ஒரு நவீன கம்ப்யூட்டரைத் தயாரித்திருக்கிறது. அமெரிக்காவில் கொலரோடோவிலுள்ள ஒரு நிறுவனத்தோடு இந்திய இன்ஜினியர்கள் பேஸ்பாலுக்குக் கண்டுபிடித்த கம்ப்யூட்டர் கருவியைக் கிரிக்கெட்டுக்குப் பயன்படத் தயாரித்திருக்கிறார்கள். Pace Fever என்ற பெயரில் வேகப் பந்து வீச்சாளர்களைத் தருவித்துச் சென்னை செம்பரம் ஸ்டேடியத்தில் அண்மையில் கிரிக்கெட் மாட்ச் நடத்திய போது இந்தக் கம்ப்யூட்டர் இயந்திரத்தைப் பொருத்தியிருந்தார்கள். அன்று பாஸ்ட் பௌலர் பாட்டர்ஸனின் 83 மைல் வேகப் பந்து வீச்சுதான் மிக அதிக வேகம் என்று சொன்னார்கள். இந்தக் கம்ப்யூட்டர் நிபுணர்கள்!

— பி. எஸ். எம்.
படம்: சாரி.

ஆணி குத்திடுச்சு... இங்கே வந்த நான் தொட்டு ஒரு பூஜை போடாம, பூசணிக்காய் உடைக்காம இருக்கிறோமே அதனாலதான் எல்லாம்...'' லேபர் மேஸ்திரி பொதுப்படையாய் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருந்தார்.

**சைட்**டுக்குள் கார் நுழைந்ததும், சொல்லி வைத்தாற் போல் எல்லோரும் அமைதியாகி, அப்புறம் சளசளவெனப் பேச ஆரம்பித்தார்கள். காரிலிருந்து இறங்கியதும் காண்ட்ராக்டர் வாட்ச்மேனைப் பார்த்துச் சப்தம் போட்டார். ''கேட்டை இழுத்துப் பூட்டுய்யா... பூட்டிக்கிட்டு யாரையும் உள்ளே விடாம கேட்லயே நில்லு...'' — வயதான வாட்ச்மேன் ஓடிப் போய்க் கண்ட்ராக்டரின் கட்டளையை நிறைவேற்றத் தொடங்கினார். கண்ட்ராக்டரின் கோபம் என்மேல் எகிறிக் கிழிக்கப் போவதை எதிர்கொள்வதற்காக நான் காத்திருந்தேன்.

''எந்த பீம் ஸன் ஷேடு?'' என்று என்னிடம் சாவகாசமாய்க் கேட்கவும் ஆச்சரியப்பட்டு அவரை அழைத்துப் போய்க் காண்பித்தேன். பார்த்ததும் பதறினார். படிப்படியாய் அவர் உஷ்ணமாவதை அவரின் முக பாவனைகளிலிருந்து உணர முடிந்தது.

''பீமும் ஸன் ஷேடும் விழுகிற அளவுக்கு என்ன வேலை பார்க்கிறீங்க? இது என்னைக்குக் கான்கிரீட் போட்டது...?''

''பத்து நாளாகுது...''

''அதுக்குள்ளே ஏன் பிரிக்கச் சொன்னே? இன்னும் நாலு நாள் பொறுத்துப் பிரிச்சா என்ன கொள்ளை போகுது?''

''பிரிச்சதுல ஒண்ணும் மிஸ்டேக் இல்லே...'' நான் பேச முற்படும் போது கையை நீட்டி, ''பேசாதே! போ... போயி ஆபீசுல உட்கார்ந்து யோசி... இது விழுந்ததுக்கு நெசமான காரணம் என்னன்னு எனக்குத் தெரிஞ்சாகணும்...'' என்றார்.

நான் ஆபீஸில் உட்கார்ந்திருக்கும் போது இவருடைய கத்தல்களைக் கேட்க முடிந்தது.

எல்லோரையும் கத்தி முடித்து ஓய்ந்து போய் ஆபீஸுக்கு வந்தார். ''அந்த பீமும் ஸன் ஷேடும் கான்கிரீட் போடுற அன்னைக்கு நீ சைட்ல இல்லையாமே...?''

''ஆமா... அன்னைக்கு நான் புரசைவாக்கம் சைட்டுக்குப் போயிருந்தேன்...''

''புரசைவாக்கத்துல என்னய்யா, வேலை?'' குரல் உச்சத்திற்குப் போனது.

''அங்கே அன்னைக்கு ஃபர்ஸ்ட் ஃப்ளோர் கான்கிரீட் ஒர்க் இருந்துச்சு; வெங்கடேஷ்தான் இங்கே இருந்து பார்த்துக்கிட்டான்...''

''மண்ணாங்கட்டி....! அவனுக்கு என்னய்யா தெரியும்? ஒரு அஞ்சரை சதுரம் வீட்டுக்கு என்ஜினியரு போய்ட்டு, இவ்ளோ பெரிய பில்டிங்குக்கு சூபர்வைசரை நிறுத்தினேன்னு சொல்றியே., உனக்கே அபத்தமாத் தெரியலே? சரி, அந்த பீமும் ஸன் ஷேடும் விழுந்ததுக்குக் காரணம் என்னன்னு கண்டுபிடிச்சியா?''

''ம்... 'காலத்துல' சுத்தமா பேரிங் (bearing) ஏறல. செங்கல் சுவர் முனையோடயே கான்கிரீட்ட நிறுத்தியிருக்காங்க; அதுவுமில்லாம, கான்கிரீட்ட நிறுத்தியிருக்கிற எடத்துக்குக் கொஞ்சம் முன்னால பீம்ல போட்டிருக்கிற லேப் ராடுல (Lap Rod) லேப் லெங்த் (Lap Length) போதாது; பைண்டிங்கும் சரியாயில்லே... அதான் பீம் தொய்ஞ்சுடுச்சு...''

கண்ட்ராக்டர் உக்கிரமானார். வெங்கடேஷை அழைத்து, ''என்னடா நீ, சூபர்வைஸ் பண்ற லட்சணம்... பீம் கான்கிரீட் போட்டா 'காலம்' வரைக்கும் போடணும்னு தெரியாது!''-சப்தம் போட்டார்.

''அன்னைக்கு ஆறரை மணிக்கும் மேல ஆயிடுச்சு; கான்கிரீட்டும் தீர்ந்து போயிடுச்சு,புதுசாக்கலக்கிப்போடமுடியாதுன்னு லேபரர்ஸ் சொல்லிட்டாங்க...'' அழுகிற தொனியில் சொன்னான்.

''மறுநாள் வந்ததும் மிச்சத்துக்குக் கான்கிரீட் போட்டிருக்கலாம்ல?''

''மறுநாள் ஞாயித்துக்கெழமையாயிடுச்சு; திங்கட்கிழமை வந்தப்போ மத்த வேலைகள்ல அதை மறந்துட்டேன்...''

தலையில் கைவைத்துக் கொண்டு கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தார். அப்புறம் என்னிடம் பேசினார். ''நீ வெங்கடேஷ் மேலேயும், வெங்கடேஷ் லேபரர்ஸ் மேலேயும் குற்றம் சாட்டிக்கிட்டு இருக்கிறதுல ஒரு அர்த்தமும் கெடையாது; இன்னைக்கு விழுந்துட்ட இந்த பீம் ஸன் ஷேடுல எனக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேலே நஷ்டம்; இதை உங்க ரெண்டு பேரு சம்பளத்துலேயும் புடிச்சா தாங்கிக்குவீங்களா நீங்க? 'பண' நஷ்டத்தை விடு; ஆளுக்கு ஏதாவது ஆகி

விருந்தா என்னய்யா பண்ணுவீங்க? எல்லோருமில்ல 'உள்ள' போயி உட்கார்ந்திருக்கணும்... கோபப்படாம வேலையை விட்டு நின்னுக்கிறேன்கிறியே? போயேன்! கூடுனபட்சம் மூணு நாள்ல வேற என்ஜினியரைக் கொண்டாந்துடுவேன். ஆனா, அதுவா முக்கியம்? உனக்குப் பொறுப்பு வேணாம்? அன்னைக்கு சைட்டுல இல்லாட்டா என்ன? அடுத்த நாள் வர்ற போது மொதல்நாள் வேலையை ஒரு கண்ணோட்டம் பார்த்திருந்தேன்னா தப்பு கண்ல பட்டிருக்கும். விபத்தைத் தவிர்த்திருக்கலாம் இல்லையா?''

என் தவறு எனக்குப் புரிந்தது. ரொம்ப நேரத்திற்கு அவர் பேசவில்லை. எங்களிடையே நீண்ட அமைதி வியாபித்திருந்தது. கோபமெல்லாம் கரைந்துபோய் ரொம்பவும் சாதாரணமாகப் பேசினார்.

''அந்த பீமும் ஸன் ஷேடும் விழுந்ததற்கு டெக்னிகலா நீ சொல்றது கரெக்டா இருக்கலாம்; ஆனா, இன்னொரு காரணமும் இருக்கு...''

''நீ இந்த சைட்டுக்கு வந்ததுலேர்ந்து எந்த விதமான பூஜையும் போடுறதில்லையாம்; அதுதான் சைட்டுல அடிக்கடி அசம்பாவிதம் நடக்குறதுக்குக் காரணம்னு லேபரர்ஸ் எல்லோரும் அபிப்பிராயப்படுறாங்க...''

''அதெல்லாம் அவசியமில்லேன்னு...'' நான் பேசி முடிப்பதற்குள் இடைமறித்துப் பேசினார். ''அனாவசியச் செலவுன்னு கூட நீ நெனைச்சிருக்கலாம்; அந்த மாதிரியெல்லாம் சிக்கனமா இருந்து நீ எனக்குச் சேர்த்துக் கொடுக்க வேண்டியதில்லே... இனிமேல் வேலை ஒழுங்கா நடக்குதான்னு பார்க்கிறதோட, ஒவ்வொரு வெள்ளி, செவ்வாய்க்கும் தவறாம பூஜை போடணும். அமாவாசைக்குப் பூசணிக்காய் உடைக்கணும்...''

மறுபடியும் சைட்டுக்குள் போனார். வேலையாட்களிடம் பேசினார். விழுந்து கிடந்த பீமையும் ஸன் ஷேடையும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் உடைத்து, கம்பியை அறுத்தெடுத்து, உடனே புதிதாகக் கம்பி கட்டிக் கான்கிரீட் போடச் சொன்னார்.

காரில் ஏறிப் புறப்படுவதற்குமுன் மறுபடியும் என்னை அழைத்தார். ''இந்தப் பூஜை புனஸ்காரங்கள், சாமி சம்பிரதாயங்கள் எதுலயும் எனக்கும் நம்பிக்கை கிடையாது. ஆனா நம்ம நம்பிக்கையை விட இங்கே வேலை செய்யற நூறு பேரோட நம்பிக்கை முக்கியமில்லையா? சாமி குத்தம்தான் இந்த ஆக்ஸிடெண்டுக்குக் காரணம்னு எல்லோரும் பிடிவாதமா நம்பறாங்க. அவங்க கிட்டப் போயி காலத்துல பேரிங் ஏறல; லேப் ராடுக்கு லேப் லென்த்தும் பெண்டிங்கும் போதலை; அதனாலதான் பீமும் ஸன் ஷேடும் விழுந்துடுச்சின்னு சொன்னா அவங்களுக்குப் புரியாது. வேலை செய்யப் போறவங்க அவங்கதான். அவங்க சமாதானமாகி மனசுல பயமில்லாம வேலை செய்யணும்னா அவங்க நம்பிக்கையை நாம நிறைவேற்றியே ஆகணும்... மறக்காம செய்திடு...'' — சொல்லிவிட்டுக் காரைக் கிளப்பிப் புறப்பட்டார்.



# என் உயிர்த் தோழன்

**அத்தியாயம் 26**

**தேர்தல் ஜுரம்**

தேர்தலுக்குச் சரியாகப் பதினைந்தே நாட்கள் மீதமிருந்தன. சென்னை மாநகரைத் தேர்தல் ஜுரம் பிடித்து ஆட்டிக் கொண்டிருந்தது. சுவரொட்டிகளும், கரித் துண்டுகளால் எழுதப்பட்ட வாசகங்களும், பல வண்ணங்களில் வரையப்பட்டிருந்த பல்வேறு அரசியல் கட்சிகளின் அடையாளச் சின்னங்களும் நகரின் சுவர்களை நான் நீ என்று போட்டி போட்டுக் கொண்டு நாசப்படுத்திக் கொண்டிருந்தன. இது போதாதென்று இரவில் எங்கே தங்களது கட்சிச் சின்னங்களை மக்கள் மறந்து விடுவார்களோ என்ற அச்சத்தில் அனைத்துக் கட்சிகளும் தங்களின் சின்னங்களை சீரியல் பல்புகள் கொண்டு சீராக ஜோடித்திருந்தன. ஒலிபெருக்கிகள் பொது மக்களின் காதுகளை நார் நாராகக் கிழித்துக் கொண்டிருந்தன. கட்சிக் கொடிகளைத் தங்கள் கொண்டைகளில் சொருகிக் கொண்டு ஆட்டோ ரிக்ஷாக்கள் கிடைத்த சந்துகளிலெல்லாம் சர் சர்ரென்று சறுக்கிக் கொண்டிருந்தன. அவற்றில் அமர்ந்திருந்தவர்கள் பொது மக்களை இரு கை கூப்பி வணங்கி, அவர்களின் பொன்னான வாக்குகளைத் தங்கள் கட்சி சார்பில் நிற்கும் வேட்பாளருக்கே அளிக்குமாறு பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

எங்கே எப்படி இருந்தாலும் நம் குயில் குப்பத்திலும் அதன் சுற்று வட்டாரங்களிலும் தருமன் சார்ந்திருந்த கட்சியின் சின்னமும், அந்தக் கட்சியைச் சார்ந்த கொடியும், அலங்கரிக்கப்பட்ட அக் கட்சியின் வண்ண சீரியல் பல்புகளும் ஏதோ அக் கட்சி எந்த எதிர்ப்புமேயின்றி தனித்துத் தேர்தலில் போட்டியிடுவது போன்ற மாயையே ஏற்படுத்தியது. அந்த அளவுக்கு வேற்று கட்சிகளின் அடையாளங்கள் மருந்துக்கும் அந்த வட்டாரத்தில் எங்கும் தென்படவில்லை. அதற்குக் காரணம் நமது 'உயிர்த் தோழன்' தருமன் இரவு பகலென்று பாராது அயராது உழைத்த உழைப்பே.

தேர்தல் தேதி அறிவிக்கப்பட்ட நாள் முதலே தருமன் தேனீயாய் மாறியிருந்தான். வேற்றுக் கட்சியினர் எவரும் முந்திக் கொள்ளுமுன் தன் சகாக்களைச் சேர்த்துக் கொண்டு, தேர்தல் பணியில் தீவிரமாய் இறங்கி விட்டிருந்தான். கண்ணில் படும் அனைத்து இடங்களிலும் தனது கட்சியின் சின்னத்தைப் பொறித்திருந்தான். மின் சாரக் கம்பம் தவிர்த்து மற்ற அனைத்துக் கம்பிகளும், கம்பங்களும் தருமனின் கட்சிக் கொடியையே தலையில் சுமந்தன. அவனுள் இம்முறை எப்படியும் தான் சார்ந்திருந்த கட்சியை ஆட்சி பீடத்தில் அமரச் செய்து விட வேண்டுமென்ற வெறி ஆழ வேரூன்றியிருந்தது.

பாரதிராஜா



கடந்த இரண்டு தேர்தல்களில் தருமனின் கட்சி ஆட்சி அமைக்கும் அளவுக்குப் பெரும்பான்மையான தொகுதிகளில் வெற்றி பெறாவிட்டாலும் 'குயில் குப்பம்' சார்ந்த தொகுதியில் நின்ற தருமனின் கட்சி வேட்பாளர் மட்டும் சென்னை நகரிலேயே அதிகபட்ச வாக்கு வித்தியாசத்தில் வெற்றிக் கொடி நாட்டியிருந்தார்.

இம்முறை அவ்விடத்தில் எப்படியும் வென்று விடுவது என்று முடிவெடுத்ததாலோ என்னவோ ஆளுங்கட்சியின் தலைவரே 'குயில் குப்பம்' சார்ந்த தொகுதியில் போட்டியிட்டார். வழக்கமாக அந்தத் தொகுதியில்நின்று போட்டியிடும் தருமனின் கட்சித் தலைவர், ஆளுங்கட்சித் தலைவரை எதிர்த்து நின்று தாம் வெற்றி பெற முடியுமா... என்று ஐயப்பட்டார். இம்முறை தமது சொந்த ஊரான வாஞ்சேரியிலே போட்டியிட்டால் நிச்சயம் வெற்றி என்ற நிலையில் அங்கேயே போட்டியிட முடிவெடுத்தார். 'குயில் குப்பம்' தொகுதியில் நிற்க வைப்பதற்கு ஒரு சிறப்பான வேட்பாளரைத் தேடிக் கொண்டிருக்கையில், வேட்பு மனுத் தாக்கல் செய்திருந்த நமது தென்னவனாகிய 'அக்னி ஆதவனின்' பெயர் அவர் கண்ணில் பட, அந்தத் தொகுதியில் தலைவர் அவனையே நிறுத்தினார்.

தென்னவன் இரட்டிப்பு மகிழ்ச்சியிலிருந்தான். அவனுக்குத் தேர்தலில் போட்டியிட 'சீட்' கிடைத்த மகிழ்ச்சி ஒருபுறம்; தனது அரசியல் வாழ்க்கையில் தான் எதிர்க்கும் முதல் நபரே ஆளுங் கட்சியின் தலைவர் எனும் பெருமை மறுபுறம்! ஆளுங்கட்சித் தலைவரை எதிர்த்து நிற்பது யாரோ புதுமுக இளைஞனான 'அக்னி' ஆதவனாம் என்று எல்லோரும் பேசிப் பேசியே அவன் சிறிது பிரபலமடைந்திருந்தான்.

தென்னவனுக்குத் தன் அதிர்ஷ்டத்தின் மீது நம்பிக்கையிருந்தது. தன் பேச்சு சாதுர்யத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை



யிருந்தது. அவனிடம் இல்லாதிருந்தது மக்களிடையே, அதுவும் அவன் போட்டியிடும் தொகுதி மக்களிடையே, நேரிடையான பரிச்சயமும்; மிகவும் முக்கியமாக — தேர்தல் செலவுகளைச் சமாளிக்க நிதி வசதியுமே.

மக்களுடன் பரிச்சயம் ஏற்பட அவன் பெரிதாக எதுவும் செய்ய வேண்டியதில்லை. மக்களை வீடு வீடாகச் சென்று ஓரிரு நிமிடங்கள் அவர்களிடத்தில் தனிமையில் பேசினாலே அவர்களைத் தன் வயப்படுத்தி விட முடியும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை தென்னவனிடத்தில் இருந்தது. என்ன இருந்தாலும் தேர்தலில் வெற்றி பெறுவதற்கு இந்தத் தகுதிகள் மட்டும் போதாது என்பதைத் தென்னவன் மிகத் தெளிவாய் உணர்ந்திருந்தான். தேர்தல் நேரத்தில் 'காசேதான் கடவுள்'. அதுவும் தென்னவனை எதிர்த்து நிற்பவரோ மாற்றுக் கட்சித் தலைவர். அவர் நிலையிலிருந்து கண்ணுறும் போது, அவரைப் போன்ற அரசியல் அனுபவமும், அந்தஸ்தும் வாய்ந்த ஒருவர், தென்னவன் போன்ற ஒரு புதுமுகத்திடம் தோற்பதை ஒருபோதும் விரும்ப மாட்டார். அதற்காகவேனும் அவர் எவ்வளவு செலவு செய்தாகிலும் வெற்றி பெற்று விட வேண்டும் என்பதில் குறியாயிருப்பார் என்பதையும் தென்னவன் மனத்தில் கொள்ள மறந்து விடவில்லை.

தற்போது தென்னவனின் தேவையெல்லாம் பணம். அது அவனிடத்தில் இல்லை. அதை தேவைக்கதிகமாகத் தன்னிடத்தில் வைத்திருக்கும் ஒருவன் அவனது வெற்றிக்கு அவசியம் தேவை. தென்னவன் தேடினான்.

புதிதாக ஒரு கட்சி ஆரம்பித்துத் தேர்தலில் நின்று, ஆட்சியைப் பிடித்து, அதன் மூலம் தன்னை உதாசீனப்படுத்திய அரசுக்குத் தக்க பாடம் புகட்ட வேண்டும், என்று அலைந்து கொண்டிருந்த டில்லி பாபுவுக்கு, அதற்கெல்லாம் அவகாசம் கொடாமல் அடுத்த தேர்தல் வந்து விட்டது. டில்லி தன் பணத்திற்கு மதிப்பளித்து தன் உத்தரவுக்குக் கட்டுப்படும் ஒரு கட்சி ஆட்சிக்கு வருவதே தனக்கு ஆதாயமானது என்று அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தான். ஆட்சி அமைக்கும் கட்சியில், அவனது கட்டுப்பாட்டிற்குள்ளிருக்கும் அமைச்சர்கள் ஒன்றிரண்டு பேராவது இருப்பது உசிதம் என்று நினைத்துக் கொண்டிருந்த அவனுக்கு, 'அக்னி ஆதவன்' எனும் அரசியல்வாதியின் புதிய வரவு புத்துணர்ச்சி அளித்தது.

டில்லி அவசரத்துடன் தென்னவனின் பூர்வாங்கத்தை அலச ஆட்களை அமர்த்தினான். அவர்கள் அவனிடத்தில் தெரிவித்தவை அனைத்துமே அவனுக்கு ஒத்துப் போயின.

'தென்னவன் தேடியது பணம் இருந்தும் பதவி கிடைக்க வழியில்லாத ஒருவனை. டில்லி தேடியது பதவி கிடைக்க வழியிருந்தும் அதை அடைவதற்கான பணம் இல்லாதவனை.'

இருவரின் தேவைகளும் அழகாகப் பொருந்தி வர, இருவரும் சந்தித்துப்

---

# நியூஸ் — ஜூஸ்!

**1**

தேர்தல் சூடு பிடிக்கத் தொடங்கி விட்டது. இல்லாவிட்டால், ராஜீவ் பிரசாரத்துக்கு வரும் போது கூட்டம் சேர்க்க, மகள் ப்ரியங்கா இப்போதே அமேதி தொகுதியில் விளம்பரத்துக்குக் கிளம்பியிருப்பாரா? கூடவே சோனியா. இந்த விவிஐபி தொகுதி மிகுந்த பரிவுடன் கவனிக்கப்படுகிறது. மருந்துகள், உணவு டப்பாக்கள், கம்பளிகள், உடைகள் மட்டுமல்ல; விவசாயிகளுக்கு உரம்; வேலை இல்லாதவர்க்கு சைக்கிள் ரிக்ஷா; விதவைகளுக்குப் பென்ஷன்! இதற்கெல்லாம் ஜக்தீஷ்பூரிலுள்ள தொழிற்சாலையொன்று உதவுகிறதோ, அல்லது அரசின் தாராளமோ — ஏதோ ஒன்று காரணம் என்றாலும், எல்லாவற்றின் மீதும் 'மிகுந்த அன்புடன்: ராஜீவ் காந்தி' என்று அழகாக அச்சிடப்பட்டிருக்கிறதாம். தொகுதியில் சுவர் முழுக்க, சுலோகன்: 'அமேதியின் பாக்கியம், ப்ரியங்கா காந்தி'!

**2**

ஜெனரல் சுந்தர்ஜியின் பரபரப்பான பேட்டிக்குப் பிறகு அருண்சிங் இன்னும் இறுக வாயை மூடிக் கொண்டு விட்டார். இருக்கிற இடமோ ஒதுக்குப்புறமாக இமாலய மலைப் பகுதி. அப்படியும் சில பத்திரிகையாளர்கள் அவரை விடவில்லை. யோகம் அடித்தது சென்னை ஆங்கில நாளிதழின் டில்லி நிருபருக்கு மட்டுமே. என்னவெல்லாம் சொல்ல வேண்டுமோ எல்லாவற்றையும் சொல்லி விட்டாராம் அருண்சிங். ஆனால் பிரசுரத்துக்குப் பச்சைக் கொடி காட்டவில்லையாம்! இதற்கிடையில் அருண்சிங் சிறு விபத்தில் சிக்கி, தில்லி மருத்துவமனையில் இருந்த போது, 'தலைமை' அவரிடம் தனியே மனம் விட்டுப் பேசியதாம்.



* பச்சைக் கொடி எப்போது?



பரஸ்பரம் அறிமுகம் செய்து கொள்ள, அதிகத் தடை இருக்கவில்லை.

முதல் சந்திப்பே இருவருக்கும் இனிதான ஒன்றாக நிறைவேறியது. ஒநாய்கள் ஒன்று சேர ஒரு தடையுமில்லாது போனது. முன்னேறுவதற்காக இருவரும் தேர்ந்தெடுத்தது குறுக்கு வழியைத்தான். வழியின் பெயர்கள் மட்டுமே வித்தியாசப்பட்டிருக்க, மற்றபடி இருவருக்கும் பொதுவான கருத்துக்கள் ஏராளமிருந்தன. இருவருமே சந்தர்ப்பவாதிகள், தங்களது தேவை பூர்த்தியாகும் பொருட்டு அடுத்தவர் வாழ்க்கையை அடியோடு அழிக்கவும் தயாராயிருந்த அவர்களது அடிப்படைக் குணமே அவர்களிடத்தில் ஓர் ஒற்றுமை உணர்வை வளர்த்தது.

அழுக்கு மனம் படைத்த அயோக்கியர்கள் தங்களிடையே அதிகம் பேசிக் கொள்ளவில்லை. மாறாக, அனைத்தையும் செயல்படுத்த முடிவு செய்தனர்.

எழுத்தில் வடிக்காது அவர்கள் செய்து கொண்ட ஒப்பந்தம் இதுதான்.

தேர்தலில் வெற்றி பெற தென்னவனுக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் எல்லா வகையிலும் அவனுக்கு டில்லி பாபு செய்து தருவான்.

மாறாக, வெற்றி பெற்றபின் தென்னவன் டில்லி பாபுவுக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் எந்த வழியிலாவது செய்து கொடுக்க வேண்டும்.

தன்னிடம் பணபலம் மட்டுமே எதிர்பார்க்க முடியும் என்று அறிவித்த டில்லி, மக்கள் ஆதரவு கிடைக்க அவன் பிடிக்க வேண்டிய ஆள் தருமன் என்பதைத் தென்னவனிடத்தில் தெரிவித்தான்.

''தருமனா! பேரே வில்லங்கமா இருக்குது!'' — தருமத்தைப் பற்றி அறவே அறியாதவனுக்கு அந்தப் பெயர் வில்லங்கமாகத் தோன்றியது வியப்பில்லை.

டில்லி ஆமோதித்தான். ''பேர் மட்டுமல்ல ஆளும் வில்லங்கமான பார்ட்டிதான், உசாரா பழகணும். படமெடுக்கற பாம்பை விட பத்து மடங்கு ரோஷமானவன். விரோதின்னு தெரிஞ்சா பல்லு பதிக்காம வுடமாட்டான். பணத்துக்கு மசியாதவன், பலானது பழகாதவன், எனக்குத் தெரிஞ்சு அவன் கைலே இருக்கற ஒரே கெட்ட பழக்கம் இந்த கட்சிவெறிதான்.. மொத்தத்துலே அவனை அமுக்கிட்டினா அப்பாலே நீ வேறே எதுக்குமே அலட்டிக்க வேணா.''

தென்னவன் ஒரு முடிவோடு புறப்பட்டான்.

சின்னங்களும் வரைந்து உங்கள் ஓட்டு என்றும் எழுதி வேட்பாளரின் பெயரை மட்டுமே விடுத்திருந்த இடங்களிலெல்லாம் தருமன் ஆள் வைத்து 'அக்னி ஆதவன்' என்று அழகாகவும் அழுத்தியும் வரையச் சொல்லி உத்தரவு போட்டுக் கொண்டிருந்த பொழுது கட்சி ஆபீசிலிருந்து அவனைத் தொகுதி வேட்பாளர் 'அக்னி ஆதவன்' அவர்கள் நேரில் சந்திக்கப் பிரியப்படுவதாக ஆள் வந்து கூறினான்.

(தொடரும்)

---

## 3

லதா மங்கேஷ்கருக்கு வயசு ஸிக்ஸ்டி ஆனாலும் வாய்ஸ் ஸிக்ஸ்டீன்தான். சமீபத்திய 'தூஃபானி'ல் மீனாட்சி சேஷாத்ரிக்குப் பாடியிருப்பதைக் கேட்பவர்கள் நிச்சயம் இதை ஒப்புக் கொள்வார்கள். எச்.எம்.வி.யின் கோல்டன் டிஸ்க், கின்னஸ் சாதனை, பத்மபூஷன் கௌரவங்களுடன், பிறந்த நாள் பரிசாக இப்போது சங்கீத நாடக அகடமியின் ஃபெலோஷிப் கிடைத்திருக்கிறது. மிகுந்த சிரமப்பட்டுக் கொண்டிருந்த ஒரு பெரிய குடும்ப பாரத்தை இளமையிலேயே சுமந்து, முன்னுக்கு வந்த ஒரு பெண்ணின் சுவாரசியமான வாழ்க்கை வரலாற்றை யாராவது எழுதி வெளியிட்டால் அதன் கதாநாயகி லதாவாகத்தான் இருப்பார். இனி திரைப்பட இசையைக் குறைத்துக் கொண்டு, சாஸ்த்ரீய இசையில் கவனம் செலுத்தப் போகிறாராம்.

## 4

இந்தி நடிகர் சத்ருகன் சின்ஹா அரசியலில் குதிக்கப் போகிறார் என்பது ரொம்ப ரொம்பப் பழைய செய்தி. பல சண்டைக் காட்சிகளில் மேலிருந்து கீழே குதித்தவர்,




• கூட்டமும் குழப்பமும்!

அரசியலில் குதிக்க மட்டும் யோசித்துக் கொண்டே இருக்கிறார். எந்தக் கட்சியில் சேருவது? இ. காங்கிரசா? ஜனதா தளமா? இல்லை, தமது பீகார் மாநிலத்திலேயே பிராந்தியக் கட்சி துவங்கி என். டி. ஆர். பாணியில் ஆட்சியைப் பிடிப்பதா? கூட்டம் செமையாகக் கூடுவதால் குழம்புகிறார் பாவம், சத்ருகன்.

— சித்தார்த்.



* மூன்றாவது அணி

# ஜெயேந்திரர் மூன்றாவது அணி அமைக்கிறாராமே?



* டானிக் சாட்சியம்!

* எஸ். சுந்தர், பாளையங்கோட்டை.

? அரிசித் தட்டுப்பாடு இருக்கும் போது இலவச அரிசி விநியோகம் சரியா?

! குழந்தைகளுக்கான சத்துணவுத் திட்டம் நீங்கலாக இலவசமாக எதையும் மக்களுக்குத் தருவது சரியல்ல. நாட்டின் பொருளாதாரத்துக்கோ இலவசங்களைப் பெறும் மக்களுக்கோ நல்லதல்ல. ஆனால் அரிசித் தட்டுப்பாட்டுக்கும் இலவச அரிசிக்கும் சம்பந்தமில்லை. வழக்கமான அரிசி கோட்டாவில் பகுதி அளவு இலவசம், அவ்வளவுதான்.

* ஏ. பி. வரதராஜபெருமாள், திருத்தங்கல்.

? ஜே. கிருஷ்ணமூர்த்தியின் தத்துவங்களில் உங்களை மிகவும் கவர்ந்தது...?

! 'யார் சொல்வதையும் அப்படியே ஏற்றுக் கொள்ளாதே! யோசி!' என்று சொன்னாரே, அதுதான்!

* கே. எல். குமணன், கல்லிடைக்குறிச்சி.*

? 'தேசாய் அமெரிக்காவின் ஸி. ஐ. ஏ. உளவாளி' என்று எழுத்தாளர் ஹெர்ஷ் தமது புத்தகத்தில் கூறியுள்ளாரே?

! "என்னை 'மோசமான பிரதமர்' என்று சொல்லுங்கள்; பொருட்படுத்த மாட்டேன். ஆனால் 'தேசத் துரோகி' என்று கூறுகிறவரைச் சும்மா விடமாட்டேன்" என்று கூறி, இந்தத் தொண்ணூற்று மூன்று வயதிலும் தன்மானத்துக்காகப் போராடுகிறார் மொரார்ஜி. நீதிமன்றத்தில் கிஸ்ஸிங்கர் சாட்சியம் மொரார்ஜிக்கு நல்ல டானிக். வழக்கின் முடிவு எப்படியோ, பார்ப்போம்.

* எம். பிரபு, குமராட்சி.

? த.மு.மு. என்ன ஆயிற்று சார்?

! சமீப காஷுவாலிடி மேஜர் சுந்தரராஜன். 'முக்கியமான நிர்வாகக் குழுக் கூட்டத்துக்குக் கூட என்னை அழைக்கவில்லை' என்று இவர் குறைப்பட, தலைமைப் பொறுப்பில் உள்ளவர்களோ, 'அவர்தான் விட்டுவிட்டுப் போவதாய் இருந்தாரே, அதனால்தான் கூப்பிடவில்லை' என்கின்றனர்!

* சே. முத்துவீரப்பன், எட்டியத்தளி.

? 'போடி கலவரத்துக்கு முதல்வர்தான் காரணம்' என்று ஜெயலலிதா குற்றம் சாட்டுவது சரிதானா?

! 'எங்கள் வீட்டுச் சுண்டெலிக்கு ஜலதோஷம். அதற்கு ஜெயலலிதாதான் காரணம்' என்று நான் கூறினால் உலகம் ஒப்புக் கொள்ளுமா?

* நகைச்சுவை பிரியன், திருச்சி.

? 'தி. மு. க. காரர்களுக்காகத் தி. மு. க.வால் நடத்தப்படும் தி. மு. க. ஆட்சி' என்று வாழப்பாடி கேலி செய்கிறாரே?

! காங்கிரஸ் ஆளும் மாநிலங்களிலும் மத்தியிலும் என்ன வாழ்கிறதாம்?

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? அரிசி கேட்டு எம். ஜி. ஆர். நடத்திய உண்ணாவிரதப் போராட்டம், அரிசி கேட்டுக் கலைஞர் நடத்தும் மனிதச் சங்கிலிப் போராட்டம் — என்ன வித்யாசம்?

! ஒரு வித்தியாசமும் இல்லை. எல்லாமே ஆளும் கட்சியினர் நடத்தும் பொழுதுபோக்குக் கலைநிகழ்ச்சிகளே. கட்சி வேறு ஆட்சி வேறு என்பதை இருதரப்புத் தலைவர்களும் உணர்ந்து, கட்சி வேற்றுமைகள் ஆட்சியில் மக்களுக்கு நன்மை செய்வதில் தடை ஏற்படுத்தாதவாறு நடந்து கொண்டால் இதுபோன்ற அற்பப் பிரச்னைகள் உருவாகாது.

* எம். ஷேக் உசேன், வடகரை.

? பிறரைக் கோமாளியாக்க நினைத்துக் கோமாளித்தனமாக நடந்து கொண்டு கோமாளியான நிகழ்ச்சி உண்டா?

! அதைத்தான் எதிர்க்கட்சித் தலைவரிடம் அனுதினமும் பார்த்து வருகிறோமே? வே...

டஸ்ட்: 'அரிசி பருப்பு பேரத்தில் லஞ்ச ஊழல் குற்றச்சாட்டு ஆதாரமற்றது; எனவே வழக்குப் போடப்படும்' என்று முதல்வர் கூற, 'வழக்கைச் சந்திக்கத் தயார்; ஆனால் உணவு அமைச்சர் ராஜினாமா செய்து விட்டு வந்து வழக்குத் தொடரட்டும்' என்று ஜெ. கூறியிருப்பது. எதிர்க்கட்சித் தலைவர் எதிர்க்க வேண்டியதுதான்; ஆனால் பொறுப்பற்ற முறையில் அல்ல.

* புனிதவல்லி இளங்கோ, கடலூர்.

? பெரிய மோசடி எது?

! போடியில் நடந்த கலவரங்களுக்குத் துள்ளிக் குதிக்கும் தமிழக இ. காங்கிரஸ், உ. பி. யில் நடந்த கலவரங்கள், துப்பாக்கி சூடு, மரணங்களுக்கு வாய்திறவாமல் 'கப் சிப்' ஆனது.

* உமார்த்தி, கோவை.

? ஹேமந்த் குமார் பற்றி...?

! 'நாகின்' திரைப்படத்தை மாணவர் பட்டாளத்துடன் பத்துமுறை பார்க்க வைத்த இசை அவருடையது.

* ரகுபதி, சென்னை.

? ஜெயேந்திரர் மூன்றாவது அணி அமைக்கிறாராமே?

! அவர் இப்போது இருக்கும் நிலையே மூன்றாவது அணிதான். அதாவது அரசியல் ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டு அரசியல் தலைவர்களுக்கும் ஆட்சியில் உள்ளோருக்கும் அறிவுரை வழங்கக் கூடிய தவமும், தகுதியும், மதிப்பும், மரியாதையும், அன்பும், அறிவும், இடசித்தமும், தியாகமும் உள்ள நிலை. இந்த நிலையிலிருந்து இறங்கி வந்தால் இரண்டில் ஒன்றாகி விடுவார். மூன்றாவது அணி மறைந்து போகும்!

* சமீப காஷ்-வாலிடி



* சொத்து விவர ஆய்வு.



* முயற்சியில் பழுதில்லை



* கவர்ந்த தத்துவம்



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

கே. எல். குமணன்,
69, அகஸ்தியர் தெற்கு மேட்டுத் தெரு,
கல்லிடைக்குறிச்சி — 627 416.

* ஹைமவதி, மேட்டூர்.

? ரொபைரோவை ருமேனியா தேசத்துக்கு அனுப்பி விட்டார்களே?

! இங்கே பயங்கரவாதிகளை ஒடுக்க இயன்றவரை முயன்றார். 'முழு வெற்றி பெறவில்லை; ஆனால் முயற்சியில் பழுதில்லை' என்றார். அரசியல் தீர்வு இன்றிப் பலப் பரீட்சையினால் மட்டும் பயனிராது என்பதை உணர்ந்திருப்பார். போகிற இடத்தில் அமைதியாக இதுபற்றி யோசித்தால் உருப்படியான அறிவுரையை அவர் இந்திய அரசுக்கு வழங்க முடியும்.

* சிவராமன், சென்னை.

? வி. பி. சிங்கின் மகனுடைய சொத்து விவரங்கள் ஆராயப்படுகிறதே?

! 'நன்றாக ஆராயட்டும்! இந்த முன்னுதாரணத்தைப் பின்பற்றி வேறு பலரது அயல்நாட்டுச் சொத்து விவரங்களையும் ஆராய அரசு முன்வரட்டும்' என்று வி.பி.சிங் பதிலடி தந்திருக்கிறாரே!

* என். சேதுராமன், குத்தாலம்.

? 'புலிகள் வன்முறையைக் கைவிட்டால் ஆட்சியைக் கலைத்துவிட்டுத் தேர்தல் நடத்தத் தயார்!' என்று வரதராஜ பெருமாள் கூறியிருப்பது பற்றி?

! இந்தப் புலிகளிடம் நரித்தனமும் உண்டு என்று சரித்திரம் கூறுகிறது. அவர்கள் ஆயுதங்களை ஒப்படைத்து ஜனநாயகப் பாதைக்குத் திரும்புவதென்றால் அதை எப்போதோ செய்திருக்கலாம்; அமைதிப் படையும் அன்றே திரும்பி வந்திருக்கும். உம்... புலிகளின் சொற்கள் செயலாகட்டும்; அப்புறம் பார்க்கலாம். வருகிற செய்திகள் நம்பிக்கை அளிப்பனவாக இல்லை.

* ஆர். சரவணன், பழனி.

? கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் சொல்ல நூறு கார்கள் எதற்கு?

! ஒரு பிரமிப்பை ஏற்படுத்தத்தான், வேறென்ன?

**நீங்கள் கேட்டவை — தராசு**

அடுத்த நூற்றாண்டு:

# கம்ப்யூட்டருக்குத் தெரியாத விஷயங்கள்....

## 11

சென்ற வாரக் கேள்வியின் விடை: லிஸ்ப் என்பது லிஸ்ட் ப்ராஸஸிங் என்னும் கம்ப்யூட்டர் மொழி.

செயற்கை அறிவு என்று ஒரு துறை இருக்கிறது. ஆர்ட்டிஃபிஷியல் இன்டெலிஜென்ஸ் (Artificial Intelligence) என்பார்கள். அந்தத் துறைக்கு ஏற்ற கம்ப்யூட்டர் மொழிகள் இரண்டு; லிஸ்ப் என்பது அதில் ஒன்று. மற்றது ப்ரொலாக்.

அதைப் பற்றிச் சொல்வதற்கு முன் கம்ப்யூட்டர் மொழி என்பது என்ன? அது எவ்விதம் நம் நடைமுறை மொழிகளிலிருந்து வேறுபட்டது? தமிழ் நம் மொழி. இதில் லட்சக்கணக்கான வார்த்தைகள் இருக்கின்றன. இந்த வார்த்தைகளை வைத்துக் கொண்டு, நாம் அன்றாடம் பேசுகிறோம், பாடுகிறோம், சண்டை போடுகிறோம், கவிதை எழுதுகிறோம். இம்மாதிரி மனித நேயம் சம்பந்தப்பட்ட அத்தனை காரியங்களுக்கும், செய்தித் தொடர்பு, வணிகம், உல்லாசம், காதல், கோபம் போன்ற மானுட உணர்வுகளை வெளிப்படுத்த மொழி பயன்படுகிறது.

கம்ப்யூட்டர் மொழிகள் பல உள்ளன. கோபால்,பேசிக்,ஃபார்ட்ரான், ஸி, ப்ரொலாக், லிஸ்ப், என்று பெயர் படைத்த அம்மொழிகள் யாவும் மனிதன் கம்ப்யூட்டருடன் தொடர்பு கொள்ள ஏற்பட்டவை. இதில் கோபம், காதல் போன்ற உணர்ச்சிகளுக்கெல்லாம் தேவை இல்லை. முக்கியமானது பிழையற்ற சந்தேகமற்ற செய்தி பரிமாற்றம். அதனால் கம்ப்யூட்டர் மொழிகளின் இலக்கணங்கள் மிகவும் எளிமையானவை. ஆனால் மிகவும் நுட்பமானவை. ஓர் அரைப்புள்ளி கால்புள்ளி எல்லாவற்றிற்கும் அர்த்தம் உண்டு. கம்ப்யூட்டர் மொழியில் ஒரு கமா, ஒரு புள்ளி விட்டுப் போனாலும் புரியவில்லை என்று சொல்லிவிடும்.

சுருங்கச் சொன்னால், கம்ப்யூட்டர் மொழிகளுக்கு உபரி வார்த்தைகள் கிடையாது. ரிடண்டன்ஸி (Redundancy) என்று இதைச் சொல்வார்கள்.

தமிழ் போன்ற மொழிகளில் ஒரே விஷயத்தைப் பலவிதங்களில் சொல்லலாம் என்பது உங்களுக்குத் தெரியும். 'உமிழ் நீரை வெளிப்படுத்தாதே' என்றும் சொல்லலாம்; 'துப்பாதே' என்றும் சொல்லலாம். கம்ப்யூட்டர் மொழியில் துப்பாதே மட்டும் தான்!

இதனால்கம்ப்யூட்டர்மொழிகளில்வார்த்தைகள் மிகக் குறைவு. பெரும்பாலான கம்ப்யூட்டர் மொழிகள் நூறு வார்த்தைகளுக்குள் அடங்கி விடும். இந்தச் சொற்ப வார்த்தைகளைக் கொண்டு கம்ப்யூட்டருக்கு ஆணை பிறப்பிக்க வேண்டும். அதனால் கம்ப்யூட்டருக்குக் கொடுக்கப்படும் ஆணைத் தொடர்கள் மிக நீளமானவை. ஒரு சின்னக் காரியத்தைச் செய்வதற்குக் கூட நூற்றுக் கணக்கான ஆணை வார்த்தைகள் கொடுக்க வேண்டும்.

கம்ப்யூட்டர் மொழியை விஸ்தரித்து மனித மொழி அளவுக்குக் கொண்டு வர ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இந்த ஆராய்ச்சியில் உள்ள கஷ்டங்களைப் பார்க்கலாம்.

ஒரு மொழியின் அத்தனை வார்த்தைகளையும் நாம் ஒரு கம்ப்யூட்டரின் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, ஒரு மகா அகராதியை அதனுள் அமைத்து, ஒவ்வொரு வார்த்தையைக் கம்ப்யூட்டருக்குக் கொடுக்கும் போதும் அதன் ஞாபகத்தில் தேடி, அர்த்தம்



"இவங்க தனி ஜாதி; முதல் தலைமுறை கம்ப்யூட்டர் இவங்க முப்பாட்டனாம்..."

* நவீன டெலிபோன்.



கண்டுபிடிக்க முடியுமா என்று யோசித்தார்கள். இதற்குக் கம்ப்யூட்டருக்கு ஞாபகத் தேவை இருந்தது. — அளவில் அதிகமாக இருந்தது. ஆரம்ப காலத்துக் கம்ப்யூட்டர்களில் அத்தனை ஞாபக அளவு இருக்கவில்லை. ஆனால் தற்போது 'சிப்' என்று சொல்லக் கூடிய சிலிக்கன் சில்லுகளின் அடர்த்தி அதிகமாகி விட்டதால் ஒரு மொழியின் அத்தனை வார்த்தைகளையும் ஒரு லேஸர் டிஸ்க் (Laser Disc) ஸிடி ராம் (CD ROM) போன்ற அடர்த்தியான நினைவாலயங்களில் சேகரித்து வைத்துக் கொள்ளக் கூடிய தகுதிகள் வந்துவிட்டன.

இது போதுமா? இம்மாதிரி முறையில் கம்ப்யூட்டர் தனிப்பட்ட வார்த்தைகளுக்கு ஈடான வார்த்தைகளைக் கண்டுபிடிக்க முடியும். ஆனால் அர்த்தங்கள் ...? —

கம்ப்யூட்டரால் ஒரு வாக்கியத்தின் இலக்கண அமைப்பை அலச முடியும். அதன் அர்த்தத்தைக் கண்டுபிடிக்க முடியாது. முந்தின வாரத்தில் 'அடி' என்று ஒரு தமிழ் வார்த்தையைச் சொன்னோம். அதற்கு சுமார் எட்டு ஒன்பது அர்த்தங்கள் உள்ளன. கம்ப்யூட்டரால் அத்தனை அர்த்தங்களையும் பட்டியலிட முடியும். ஆனால் ஒரு வாக்கியத்தில் அமைக்கும் போது அந்த வாக்கியத்தின் உள் அர்த்தத்தைக் கம்ப்யூட்டர் கண்டுபிடிப்பது கஷ்டம்.

நாம் ஒரு வாக்கியத்தைப் புரிந்து கொள்ளும் முறையில், நாம் அந்தக்கணம் வரை வாழ்ந்த அத்தனை அனுபவங்களும் பின்னணியில் இருக்கின்றன. நாம் படித்த புத்தகங்களும் நம் தாய், தந்தையர், ஆசிரியர், நண்பர்கள், அனுபவங்கள் மூலம் பெற்ற பாடங்கள் அத்தனையும் அதன் பின்னணியில் உள்ளன என்பது யோசித்துப் பார்த்தால் தெரியும்.

''கடைக்குப் போய் ஒரு கால் கிலோ வெல்லம் வாங்கிட்டு வந்துருங்க'' என்று உங்களிடம் கேட்டால் அதைப் புரிந்து கொண்டு எவ்வாறு செயல்படுகிறீர்கள்?

கேட்டது உங்கள் மனைவியாக இருந்தால் ''போ, போ, உனக்கு வெல்லம் வாங்கிட்டு வர்றதுதான் வேலையோ! உனக்குச் சம்பாதிச்சுட்டு வர்றது போதாதோ?'' என்கிறீர்கள். அதுவே, புதிதாகக் கல்யாணம் ஆன மனைவியாக இருந்தால், 'வாங்கிட்டு வர்றேன் கண்ணு. இதைவிட வேற வேலை என்ன?'' என்கிறீர்கள். பக்கத்து வீட்டுப் பெண்ணாக இருந்தால், ''இதோ, உடனே வாங்கிட்டு வர்றேன். வேற ஏதாவது வேணுமா?'' என்று கேட்கிறீர்கள். மேலதிகாரியாக இருந்தால், ''உடனே ஸார்!'' என்று ஓடுகிறீர்கள். பக்கத்து வீட்டுக்காரராக இருந்தால் ''வெச்சுருங்க; அரை மணி கழிச்சு நேரம் இருந்தால் வாங்கிட்டு வர்றேன்!'' என்கிறீர்கள்.

இவ்வாறு பேருக்குப் பேர் கேட்பவர் சமுதாய நிலைக்கும் நட்பு நிலைமைக்கும் ஏற்ப ஒரே வாக்கியத்துக்கு உங்கள் பதில் மாறுகிறது. அதில் எதைக் கம்ப்யூட்டருக்குச் சொல்லித் தருவது? எல்லா வாக்கியங்களுக்கும் ஒரு நேரான பொருளை மட்டும் கொண்டு, 'வெல்லம் கேட்டால் வெல்லம் வாங்கி வரவேண்டும்' என்றுதான் அர்த்தம்' என்று கம்ப்யூட்டருக்குச் சொல்லிக் கொடுத்தால் மட்டும் போதுமா? போதாது! வெல்லம் என்பது என்ன? அது எங்கே கிடைக்கும்? கால் கிலோவுக்கு எத்தனை பைசா கொண்டு போக வேண்டும், பையின் அளவு என்ன, வெல்லக் கடை எங்கிருக்கிறது? அதற்கு பஸ்ஸில் போக வேண்டுமா, சைக்கிளில் போகவேண்டுமா, போகிற போக்கில் தபாலாபீஸில் அந்தக் கடிதத்தைப் போஸ்ட் பண்ணி விடலாமா, இல்லை தீபாவளி ரிலீஸ் விஜய்காந்த் படத்துக்குப் புக் பண்ணி விடலாமா, இப்படி எத்தனை விஷயங்கள் வருகின்றன ...!

இதெல்லாம் மானுட சமுதாய அறிவைச் சேர்ந்தவை. இதைக்கம்ப்யூட்டருக்குக்கற்றுத் தருவது என்பது இந்த நூற்றாண்டில், ஏன் அடுத்த நூற்றாண்டின் ஆரம்பத்திலும் நிகழ்வது கஷ்டம். காரணம், நாம் ஒரு வாக்கியத்தைச் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு பொருள்படுத்திக் கொள்கிறோம். அந்தத் தகுதி நம் அனுபவத்திலும் புலனுணர்வுகளிலும் படிப்படியாக உருவானது.

மனித மூளை என்பது கோடிக்கணக்கான வருஷங்களாகப் பரிணமித்து, இன்றைக்குச் சிக்கலான, கோடிக்கணக்கான இணைப்புக்கள் கொண்டது. கம்ப்யூட்டருக்கு 150 வருடங்களாகத்தான் சரித்திரமே. மனித அறிவு கம்ப்யூட்டருக்கு வருவது சாத்தியமில்லை. கம்ப்யூட்டருக்குப் புகட்டப்படும் அறிவு செயற்கை அறிவு — இதைத்தான் 'ஏ ஐ' என்கிறார்கள்.

செயற்கை புத்திசாலித்தனம். மூளைக்கும்

**சுஜாதா**

## மிடி என்றால் என்ன?

24.9.89 கல்கி இதழில் சுஜாதா எழுப்பிய இந்தக் கேள்விக்குச் சரியான விடை அளித்தவர்கள் 34 பேர்கள். அவர்களில் பின்வரும் 4 பேருக்குக் குலுக்கல் முறையில் இளையராஜா இசையமைத்த ஆடியோ கேசட் பரிசாக அளிக்கப்படுகிறது.

1. பி. லக்ஷ்மணன்,
   II யூ. ஜி.,
   பிஸிக்ஸ் இலாகா,
   ஏ. பி. ஏ. ஆடவர் கல்லூரி,
   பழனி — 624 602.

2. ஜி. சுந்தரி,
   சுருக்கெழுத்தர்,
   C/o. வேளாண்மை தலைமைப் பொறியாளர் அலுவலகம்.
   480, அண்ணா சாலை,
   நந்தனம், சென்னை — 35.

3. சி. சிவகுமார்,
   S/o. சி. சௌடம்மாள்,
   83/2, திருநகர், பழனி — 624 602.

4. எம். சின்னசாமி,
   போர்மன் பி.எச். II,
   கோடையார் லோயர் காம்ப்,
   கோடையார் கீழ்த்தாங்கல்,
   கன்னியாகுமரிமாவட்டம்—629 102.

இதற்கும் ஒப்புவமை இல்லை. கம்ப்யூட்டர் அறிவு என்பதைப் பற்றி மிகையாக எண்ணிக் கொள்ளத் தேவையில்லை. கம்ப்யூட்டர் சில காரியங்களை அபார வேகத்தில் செயல்படுத்தக் கூடியது. இந்த வேகத்தில் மனித மூளையை அது மிகவும் மிஞ்சியிருக்கிறது. ஆனால் அதனால் உருப்படியாகத் தன்னிச்சையாக ஒரு கவிதை எழுத முடியாது. உள்ளம் கலந்து ஒரு காதல் கடிதம் எழுத முடியாது. உலகத்தில் உள்ள அத்தனை காதல் கடிதங்களையும் அதனால் ஞாபகத்தில் அடுக்கி வைக்க முடியும். ஆனால் காதல் என்றால் என்ன என்று தெரியாது!

உணர்ச்சி என்பதே — தான், தனது என்கிற உள்ளுணர்வே—அதற்கு இல்லை.

ஒரு கம்ப்யூட்டரால் மிக அபாரமாக 'செஸ்' ஆட முடியும். ஆனால் தான் செஸ் ஆடுகிறோம் என்பது அதற்குத் தெரியாது!

இந்த வாரக் கேள்வி: மோடெம் (Modem) என்பது என்ன?

சரியான விடை எழுதும் ஒருவருக்கு ஞானச்சேரி வெளியீடான 'ஊஞ்சல்' என்னும் என் நாடக நூல் பரிசு. முடிவு தேதி: 16.10.89.

(தொடரும்)

---



# அன்புள்ள....

- என். டி. திவாரி,
  உம் மீது உருதுமொழி
  செய்கிறது சவாரி.
  தேர்தல் சவால் —
  சமாளி, சமாளி!

  — மொழிப்போர் வீரன் 'முழி பிதுங்கி'

- மாண்புமிகு வரதராஜ பெருமாள்,
  முதலமைச்சர் பொறுப்பை
  எப்படி விடத் துணிந்தீர்கள்?
  அப்புறம் டீ. வி. செய்தியில் —
  ஐயோ பாவம் — யாரைக் காட்டுவார்?

  — சானல்-4 அபிமானி.

— எஸ். வி. என்



# எதுக்கு வம்பு...!



"மேல் சபையைத் திரும்பக் கொண்டு வர்றதைப் பற்றி உங்க கருத்தென்ன...?"

"வேண்டாம்னு நினைக்கிறேன்..."

"ஏன்...?"

"கலாட்டா ஏதும் நடந்தா மேலேயிருந்து கீழே விழுந்து அது வேறே காயமாகுமே...!"

— காஞ்சி எஸ். ஃபைசுதீன்.



ஐஃபில் கோபுரம் (Eiffel Tower) மார்ச் 30 — ஆம் தேதி நூற்றாண்டைப் பூர்த்தி செய்துள்ளது.

கட்ட ஆரம்பித்தது: 1887 — ஆம் ஆண்டு ஜனவரி 28 — ந் தேதி.

கட்டி முடித்தது: 1889 — ஆம் ஆண்டு மார்ச் 30 — ந் தேதி.

ஆகஸ்ட் மாதம் வெயில் காரணமாக 18 சென்டிமீட்டர் இதன் உயரம் அதிகரிக்கிறது! ஜனவரி மாதம் குளிர் காரணமாக உயரம் 15 சென்டிமீட்டர் குறைகிறது!

ஏழு ஆண்டுகளுக்கு ஒரு முறை இதற்கு வர்ணம் பூசப்படுகிறது. இதற்குச் செலவாகும் பெயிண்ட் 41,000 லிட்டர்!

தொகுப்பு: எம். எஸ். எல்.



● குழந்தை வளர்ப்புத்தானே? அது ரொம்பவும் சுலபமான வேலை! குழந்தை உன்னுடையது அல்ல, பிறருடையது என்று பாவித்துக் கொள். அவ்வளவு தான். பிறருடைய குழந்தையை எப்படி வளர்க்க வேண்டும் என்பது தெரியாதவன் எவனுமே இந்த உலகில் இல்லை!

— பில் காஸ்பி

— ஆர். ஆர். பூபதி



"எதுக்காக உனக்கு 'மெமோ' கொடுத்திருக்காங்க?"

"மேனேஜர் கிட்ட பக்கத்தில் வந்து நின்ற போது மளமளன்னு டைப் அடிச்சதுக்குத்தான்!"

"அதிலே என்ன தப்பு இருக்கு?"

"டைப்ரைட்டர்லே பேப்பரே இல்லையே!"

— எஸ். ப்ரியதர்சினி.



ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VII
ராஜ்மோகன் காந்தி

# மவுண்ட்பேட்டனின் அழைப்பு

"ஜாஜி பயன்படுத்திய சில சொற்கள் தமது உள்ளத்தைப் புண்படுத்தி ...ல்லியிலிருந்து பால்ராஜ் பூரி கடிதம் ...ார். அதற்கு ஸி. ஆரின் பதில்: ... மார்ச் 2ம் தேதி கடிதம். அதில் ...படும் கண்டனத்தை ஏற்கிறேன். வருத்தம் தெரிவிக்கிறேன். அன்புடன் தங்கள் நலனை நாடும்...."

தவறு நடந்து விட்டால் அதை ஒப்புக் கொண்டு வருத்தம் தெரிவிக்க ராஜாஜி என்றுமே தயங்கியதில்லை. இதற்குச் சில மாதங்களுக்கு முன்னால் 1965 ஜூனில் நாக்பூரைச் சேர்ந்த டாக்டர் என். பி. கரேக்கு அவர் எழுதிய கடிதமானது 'வருத்தம் தெரிவித்து எழுதப்பட்ட உன்னதமான கடிதங்கள்' என்ற தொகுப்பு வெளியிடப்படுமானால் அதில் இடம் பெறத் தகுதி பெற்றதாகும். டாக்டர் என். பி. கரே 1938ல் மத்திய மாகாணங்களின் பிரதமராகப் பதவி வகித்தவர். ஆனால் காங்கிரஸ் உயர்மட்டத் தலைவர்களின் ஒரு முடிவுப்படி அவர் அப்பதவியிலிருந்து நீக்கப்பட்டார். அப்போது முதல் அவர் மிகுந்த கசப்புணர்வுடன் காங்கிரஸ் இயக்கத்தைப் பற்றியும், காந்தியைப் பற்றியும், ஸி. ஆரைக் குறித்தும் குறைகளைக் கொட்டி வந்தார். 1940களின் தொடக்கத்தில் அவர் வைஸ்ராயின் நிர்வாகக் கௌன்ஸிலில் கூட அங்கம் வகித்தார். 1965ல் அவர் ஸி. ஆருக்குத் தமது சுயசரித நூலை அனுப்பி வைத்தார். அதில் அவர் மீண்டும் ஒருமுறை தமது பழைய கோப தாபங்களைச் சற்றும் குறைக்காமல் விவரித்திருந்தார். இந்த நூல் கிடைக்கப் பெற்றது பற்றி ஸி. ஆர். அவருக்கு எழுதிய பதில் இத்தகைய கடிதங்களின் சிகரம் என்றே வர்ணிக்கலாம்:

"அன்புள்ள டாக்டர் கரே, தங்கள் சுயசரிதத்தின் ஒரு பிரதியைத் தாங்கள் கையெழுத்துப் போட்டு எனக்கு அனுப்பி வைத்ததற்காக இதயபூர்வமான நன்றி. மட்டில்லா அகம்பாவம் கொண்டிருந்த ஒரு சக்தி வாய்ந்த கட்சி உங்களை மோசமான விதத்தில் நடத்திய அந்தச் சரித்திர நிகழ்ச்சிக்குப் பிறகு எத்தனையோ ஆண்டுகள் ஓடிச் சென்று விட்டன; எத்தனையோ காரியங்கள் நடந்து விட்டன; விநோதமான மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

"அன்று நடந்த அந்தச் சண்டை பற்றியும் அதன் பல்வேறு நிலைகள் பற்றியும் சம்பவங்கள் குறித்தும், இன்று நாம் சிரிக்கலாம். இவற்றுடன் இணைந்ததாக இருந்த கர்வம், அசட்டுத்தனம், வருத்தத்துக்குரிய ஆழ்ந்த கோபதாப உணர்வுகள், திறமையின்மை முதலியவை பற்றியும் இன்று எண்ணிப் பார்த்து நகைக்கலாம். ஆனால் உங்களைக் கோபத்தில் ஆழ்த்தி, மன்னிக்காத உள்ளத்துடன் விளங்குமாறு செய்துள்ள உங்களுடைய சுயமரியாதையுடன் கூடிய நேர்மையான ஆன்மாவை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அந்தச் சம்பவத்தில் சம்பந்தப்பட்டிருந்தவர்களில் பெரும்பாலோர் இறந்து விட்டனர். நமது தவறுகளின் பாதிப்பிலிருந்து நம் எல்லோரையும் கடவுள் காப்பாற்றுவாராக.

"நான் டயரியோ குறிப்புக்களோ ஏதும் வைத்துக் கொள்ளவில்லை. ஞாபகத்திலிருந்தே பல குறிப்புக்களைத் தருகிறேன். கடந்த காலம் என்பது ஒரு நகைச்சுவை நாடகம் போல் தோன்றுகிற நிலையை நான் அடைந்து விட்டேன். கடந்து போன அந்த நாட்களில் தங்கள் மனம் புண்படும்படியாக நான் நடந்து கொண்டிருந்தால் அதற்காக என்னை மன்னிக்குமாறு இறைஞ்சுகிறேன். நீங்கள் என்னை விட நான்கு வயதே சிறியவர். கடவுள் உங்களுக்கு அருளட்டும்."

• ராதாகிருஷ்ணன்: மவுண்ட்பேட்டனுக்கு மௌனமே பதில்.



ஹாரி மில்லர்: மறக்க முடியாத சந்திப்பு.

**ப**த்திரிகையாளர்கள் ராஜாஜியைச் சந்திக்க ஆர்வத்துடன் அடிக்கடி சென்றனர். நேற்றைய செய்தியானாலும் அதனை ராஜாஜி ஒரு புதிய கோணத்தில் பார்த்துக் கருத்துத் தெரிவிப்பார். அவர் கூறுகிற விஷயம் ஒரு சர்ச்சையைக் கிளப்பும் என்றும் எதிர்பார்க்கலாம். பத்திரிகையாளருக்கு அவர் என்றுமே ஏமாற்றம் அளித்ததில்லை. ஆனால் பத்திரிகையாளர்கள் அவரை நினைவு கூர்வது, பேட்டிகளின் போது அவர் அளித்த சுவையான பதில்களுக்காக மட்டும் அல்ல. இளம் பத்திரிகையாளர்கள் இந்தப் பழுத்த அரசியல்வாதியை ஒரு புரட்சியாளராக மட்டுமின்றி ஒரு நல்லாசிரியராகவும் கண்டு பிரமித்துப் போனார்கள். கனடா நாட்டிலிருந்து டொரான்டோ மெயில் பத்திரிகையின் பிரதிநிதி வந்து ராஜாஜியைச் சந்தித்த போது ஸி. ஆர். தமது தொண்ணூறாவது வயதை நெருங்கிக் கொண்டிருந்தார். இந்தச் சந்திப்பு பற்றி டேவிட்வான் பிராக் எழுதியது அவரைப் போன்ற வேறு பல பத்திரிகையாளர்களின் அனுபவத்திலிருந்து மாறுபட்டதல்ல:

''ஆரம்பத்தில் ஓரிரு தடவைகள் நான் ராஜாஜியுடன் தனித்திருந்த போது அந்த முதுபெரும் மனிதரின் முன்னால் பயபக்தியுடன் பிரமித்து இருந்தேன். காரணம், அவர் வாழ்நாளிலேயே அவரது சாதனைகள் பேசப்படுமளவில் சரித்திரம் படைத்தவர் அல்லவா? ஆனால் ராஜாஜியின் சொற்கள் மட்டுமல்ல, அவர் அருகிலிருப்பதே சீக்கிரத்தில் ஓர் அமைதியை நம் உள்ளத்தில் உருவாக்குகிறது. ராஜாஜிதான் அதிகமாகப் பேசிக்கொண்டிருப்பார் என்றாலும், ஆழ்ந்த மனிதாபிமானத்துடன் கூடிய ஓர் உரையாடலில் நாம் பங்கு பெறுவது போன்ற உணர்வு நமக்கு ஏற்படுகிறது. பொது வாழ்க்கையில் நாம் சந்திக்கும் பல மனிதர்களிடையே அவர் ஓர் அற்புதம்! யாருடன் பேசிக் கொண்டிருக்கிறாரோ அவருடன் ஒரு நெருங்கிய மன இசைவை, ஒப்புரவை ஏற்படுத்தக்கூடிய அபூர்வமான ஒரு சில மனிதர்களுள் அவர் ஒருவர்.''

பிரிட்டனில் பிறந்து சென்னையில் வாழும் புகைப்பட நிபுணர் — பத்திரிகையாளர் ஹாரி மில்லர், ராஜாஜியைத் தாம் சந்தித்ததை என்றைக்குமே மறக்க மாட்டார்! தமக்குக் கொடுக்கப்பட்டிருந்த நேரத்துக்கு முன்னதாகவே வந்து விட்ட அவர், காத்திருக்க நேர்ந்தது. குறிப்பிட்ட நேரத்தில் ஸி.ஆரின் நீளமான மூக்கையும் தொடர்ந்து அவரது முழுமையான உருவத்தையும் கண்ட புகைப்பட நிபுணரை, ராஜாஜியின் சொற்கள் தாக்கின: ''மிஸ்டர் மில்லர்! குறிப்பிட்ட நேரத்துக்குப் பதினைந்து நிமிஷம் பின்னதாக வருவது எவ்வளவு இடைஞ்சலோ அவ்வளவு இடைஞ்சல் குறிப்பிட்ட நேரத்துக்குப் பதினைந்து நிமிஷம் முன்னதாக வருவதும்!''

**ஸி.** ஆருக்கு 1967 தொடக்கத்தில் வயது 88. மவுண்ட்பேட்டனின் அழைப்பை ஏற்று டில்லி ராஷ்டிரபதி பவனுக்குச் சென்றார். பிரிட்டிஷாரிடமிருந்து அதிகார மாற்றம் நடந்த அந் நாளைய நினைவுகளை ஒலியிலும் ஒளியிலும் பதிவு செய்ய வேண்டும் என்பதற்காக விடுக்கப்பட்ட அழைப்பு. லண்டனிலிருந்து பயணப்பட்டு வந்திருந்தார் மவுண்ட்பேட்டன். அவரும் ஸி. ஆரும் குடியரசுத் தலைவர் ராதாகிருஷ்ணனும் உரையாடினர். அம் மூவருக்குக் கீழும் ஜவாஹர்லால் பிரதம மந்திரியாகச் செயலாற்றியிருந்தார். ஆனால் ராதாகிருஷ்ணன்தான் மூன்று பிரதம மந்திரிகளுடன் குடியரசுத் தலைவர் என்ற முறையில் தொடர்பு கொண்டிருந்தவர். அவர்களில் இன்றையப் பிரதமராக விளங்கியவர் இந்திரா காந்தி. பேச்சினிடையே மவுண்ட்பேட்டன் குடியரசுத் தலைவரிடம், அந்த மாளிகையில் முன்பு பணியாற்றிய ஓர் ஊழியரின் மகனுக்கு ஒரு வேலை போட்டுத் தர முடியுமா என்று கேட்டார். ராதாகிருஷ்ணன் சற்றுத் தயங்க, ராஜாஜியோ பளிச்சென்று, ''நாம் பரம்பரை பாத்தியதை என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டு விட்டோம், இல்லையோ?'' என்று கேட்டார்.

மவுண்ட்பேட்டனிடம் வெடித்த சிரிப்பு அடங்கு முன்னர், ஸி. ஆர். தமது கருத்துக்களைப் பதிவு செய்ய காமிராவைச் சந்தித்தார்.

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

எழில்மிகு கலைபொக்கிஷங்கள் நாட்டிற்கழகு
ஏற்றமிகு குமரன் பட்டுப்புடவைகள் அணிவதற்கழகு
- இந்த தீபாவளிக்கு




12, நாகேஸ்வரன் சாலை, (பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை 600 017.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka